# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பிலும் காத்திடுவீர்
உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல்
மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றாண்டு
கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது.
பிஞ்சு மென்மை சொருகும் பியர்ஸ்—தூய்மைக்
கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப்
பார்க்கக்கூடிய உண்மைத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**



# கல்கி

1977 ஜனவரி 30
ஆலை ஸ்ரீ
தை 17



## யோசு புதிர்!



9 சென்டிமீட்டர் நீள, அகல, உயரம் கொண்ட கன சதுர மரக்கட்டையின் எல்லாப் பக்கங்களும் பெயிண்ட் செய்யப்பட்டுள்ளன. அதை 3 சென்டிமீட்டர் நீள, அகல, உயரம் கொண்ட 27 சிறிய கன சதுரக் கட்டைகளாக வெட்டி எடுத்தால், அவற்றில் எத்தனை கட்டைகள் 3 பக்கம் பெயிண்ட் செய்யப்பட்டிருக்கும்? 2 பக்கம் பெயிண்ட் செய்யப்பட்டவை எத்தனை? ஒரே ஒரு பக்கம் மட்டும் பெயிண்ட் உள்ளவை எத்தனை? பெயிண்டே படாத கட்டைகள் எத்தனை? —ஷேக்

விடை: 3 பக்கம் பெயிண்டுடையவை 8; 2 பக்கம் பெயிண்டுடையவை 12; 1 பக்கம் பெயிண்டுடையவை 6; பெயிண்ட் படாதவை 1.

கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.






அமிஸ் ஓல்ட்

புதுதில்லி. எம். ஸி. ஸி. காப்டன் டோனி கிரெய்க்கும் ஸிவரும் ரேடியோ பேட்டியை முடித்துக் கொண்டு வந்தபோது அவர்கள் கோஷ்டிக்கான பஸ் போய்விட்டது. ரசிகர்கள் மத்தியில் நடந்து சென்று கண்ணில் தென்பட்ட முதல் இரு ஸ்கூட்டர்காரர்களைத் தடுத்து நிறுத்தி அவர்கள் பின்னால் ஏறிக் கொண்டு ஹோட்டலைச் சென்றடைந்தார்கள். அந்த ஸ்கூட்டர்காரர்களுக்கு ஒரே ஆனந்தம். தங்களைப் பெருமைப்படுத்திய இங்கிலாந்து ஆட்டக்காரர்களுக்கு அடுத்த நாள் நிறையப் பரிசுப் பொருள்களைக் கொணர்ந்து தந்தார்களாம்.

இந்திய கோஷ்டிக்குக் கல்கத்தாவில் தோல்வி கிட்டியபோது ஒரு ரஸிகர் ஆரஞ்சுப் பழத்தைக் காவஸ்கரின் கன்னத்தைக் குறி பார்த்து எறிந்தார். காவஸ்கர் கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டபோது அருகிலுள்ள விசுவநாத் அவர் முதுகில் தட்டிக்கொடுத்து, ''கவலைப்படாதே, காவஸ்கர்! இந்த ஆரஞ்சுப் பழத்தை எறிந்த இதே ரசிகர் இன்னொரு தடவை உன் கன்னத்தில் முத்தமிட ஆவலுடன் துடிப்பார்!'' என்று ஆறுதல் வார்த்தைகள் சொன்னார்!

வெற்றியும் தோல்வியும் சமமாகப் பாவிக்க வேண்டும் என்று வாய் வார்த்தையாகச் சொல்லிவிடலாம்! ஆனால் வெற்றியும் தோல்வியும் கிரிக்கெட் ரஸிகர்களை உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கடித்து விடுகின்றன!

ரசிகர்களின் உணர்ச்சி வெள்ளத்தைத் தடுத்து 'அணை' போடுவதில் டோனி கிரெய்க் அசகாய சூரர்! சேப்பாக்கத்தில் 'போர்! போர்!' என்று ரசிகர் குழாம் அலறியது. உடனே மட்டையைத் திருப்பிப் பிடித்துக் காட்டி, 'நீங்களே வந்து ஆடுங்களேன், பார்க்கலாம்!' என்பது போல் நிற்கிறார். உணர்ச்சி வெள்ளம் கட்டுப்படுகிறது!

ஸிவர் 'வாஸலைன்' போன்ற பொருள் தடவிப் பந்தைப் பளபளப்பாக்கினார் என்று 'குற்றச்சாட்டு' கிளம்பியது. அதன் பிறகு சென்னை சிதம்பரம் ஸ்டேடியத்தில் ரஸிகர்கள் உணர்ச்சி வெள்ளத்தில் மிதந்தார்கள். ஸிவர் பவுண்டரி எல்லைக்கு 'பீல்ட்' செய்ய வந்தபோது அவர்மீது 'ஆரஞ்சு' பழத் தோலை வீசித் தங்கள் அதிருப்தியைக் காட்டிக்கொண்டனர். உடனே டோனி கிரெய்க் அந்த ரஸிகர் குழாமைப் பார்த்து ஒரு பெரிய 'கும்பிடு' போட்டார்! அடுத்த கணம் வெறுப்பு அலை மாறி இருந்த இடம் தெரியாமல் ஒழிந்து போய் விட்டது. டோனி கிரெய்க் ரொம்பப் பொல்லாதவர்! சிதம்பரம் ஸ்டேடியத்தில் ரஸிகர்களைத் தம் பக்கம் இழுக்கப் பலவித அங்க சேஷ்டைகளைக் கைக்கொண்டார்! அவர் ஒருவர்தான் ஒரு 'விக்லர்' அடித்து ரஸிகர்களை மெய்மறக்க வைத்தவர்! வாஸலைன் விஷயத்தைப் பெரிது படுத்தாமல் விட்டு விட்ட நமது கிரிக்கெட் தலைவர்கள் பாராட்டுக்குரியவர்கள். வன்மத்தை வளர்த்துக் கொண்டே போனால் கிரிக்கெட் ஆட்டத்தின் எதிர்காலமே பாழாகி விடும்.

● ● ●

மோகிந்தர் அமர்நாத்தின் மீது பந்துக்கு என்ன 'மோகமோ' தெரியவில்லை! பிரேரர்லி அடித்த பந்து பாட்ஸ்மனுக்கு அருகில் 'பீல்ட்' செய்த மோகிந்தரின் கன்னத்தில் நன்கு தடம் பதித்து விட்டது! அதோடு விட்டதா?





ரண்டால்



டோஸாசர்ட்



பிரேரர்லி

பிரேரர்லி அடித்த மற்றொரு வேகமான பந்து மோகிந்தர் தலையில் மோதித் துள்ளிக் குதித்து பிரஸன்னாவின் கையில் 'காட்சா'க மலர்ந்தது! பிரசன்னா முன் யோசனையுடன் அதைக் காட்ச் பிடித்தது மிக அதிசயம்! மோகிந்தர் தம் தலையைத் தடவிக் கொண்டு தள்ளாட இந்தியக் கோஷ்டி அவருக்கு 'சிசுருஷை' செய்ய முனைந்தது! பிரேரர்லி விக்கெட் இழந்த துயரத்தில் தலை குனிந்தபடியே வெளியேறினார். மோகிந்தர் தலை தப்பியதும் விக்கெட் விழுந்ததும் இணைந்தன!

● ● ●

இந்தியக் கோஷ்டி பீல்டிங் செய்யும்போது ஸ்கிரீன் நகர்த்தும் படலம் தொடர்ந்தது. அச்சமயத்தில் காப்டன் பேதி கையை உயர்த்திக் காட்டி ஆட்டத்தைத் தொடர வேண்டாம் என்றார். அருகில் நின்ற டோனி கிரெய்க்கும் காலை மடித்துக் கொண்டு கையை உயர்த்தி 'இப்போதும் நான்தான் உயரம்! பாருங்கள்' என்பது போல் நின்று ரஸிகர்களை மகிழ்வித்தார்!

● ● ●

பெவிலியனில் எம். ஸி. ஸி. ஆட்டக்காரர்களுக்கான ஆசனங்கள் பெரும்பாதும் காலியாகவே இருந்தன. இரு ஆங்கிலப் பெண்மணிகள் மட்டும் முழு நேரமும் அமர்ந்து வெறிச்சோடிப் போகாமல் செய்தனர். எம். ஸி. ஸி. விக்கெட் கீப்பர் ஆலன் நாட்டின் மனைவி ஸ்ரீமதி ஜான் நாட் ஆங்கில நாவலைப் படிப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்! அவருக்கு அருகில் அமர்ந்திருந்தவர் ஸ்ரீமதி ப்ளச்சர்! ஓவியர் விஜுவின் 'ஸ்கெட்ச்' புத்தகத்தில் இடம் பெற்றவர்கள் முதலில் இவ்விருவர்தாம்! பெவிலியன் அறைக்குள்ளேயே எந்நேரமும் அமர்ந்திருந்த எம். ஸி. ஸி. ஆட்டக்காரர்கள் ஆட வரும் நேரம் பார்த்து அவர்களைத் தம் சித்திர வலைக்குள் வளைத்தார்!

எம். ஸி. ஸி. ஆட்டக்காரர்களைப் படம் போட்டு விட்டால் போதுமா? அவர்களது 'ஆட்டோகிராப்' படங்களில் வாங்க வேண்டுமே?

எம். ஸி. ஸி. மானேஜர் பாரிங்டன் பெவிலியன் அறைக்கு வெளியே ஏதோ காரியமாக வந்தார். அவரை இருவருமாகச் சேர்ந்து முற்றுகையிட்டோம்.

ஓவியர் விஜுவின் படங்களைப் புரட்டிப் பார்த்துக் கொண்டே வந்தவர் பிரமித்துப்

1. மூன்றாவது கிரிக்கெட் டெஸ்டில் ரண்டால் 'அவுட்' கண்டு சந்திரசேகர் பூரிப்பு. கிர்மானி 'காட்ச்' பிடித்தார். 2. வில்லிஸை 'ரன் அவுட்'டாக்க விக்கெட் கீப்பர் கிர்மானி ஸ்டம்ப் குச்சிகளைத் தட்டி விடுகிறார். 3. அண்டர்வுட் பந்து வீச்சில் பட்டேல் விக்கெட் இழக்கிறார்! - ஜீன் போல்ட்!










விஜுவின் 'ஸ்கெட்ச்' புத்தகத்திலிருந்து சில காட்சிகள்:

1. ஸ்ரீமதி ப்ளச்சர் 2. வில்லிஸ் 3. பாரிங்டன் 4. அண்டர்வுட் 5. லீவர் 6. ஸ்ரீமதி ஜான் நாட் 7. ஆலன் நாட். 8. காப்டன் கிரெய்க் ரஸிகர்களுடன் நடத்திய மௌன உரையாடல் தோற்றங்கள்.











# சதம் கண்ட பள்ளி

**மா**யூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளி நூறு ஆண்டுகளைக் கடந்து 101ம் ஆண்டுப் பணியைத் தொடங்கியுள்ளது.

கடைத்தெரு சுப்பிரமணிய அய்யர் 1910வரை நகரசபைத் தலைவராக இருந்து பள்ளிக்கு வேண்டிய கட்டிடங்களை ஏற்படுத்தினர். 1910லிருந்து 1917 வரை இப்பள்ளியின் முன்னேற்றத்தில் மாத்தூர் எம். எஸ். நடேச அய்யர் அக்கறை காட்டினர். அன்னுர் நகர சபைத் தலைவராக இருந்தபோது சர்க்காருடன் தீவிரமாகக் கடிதப் போக்குவரத்து நடத்தி ''ராஜாத் தோட்டம்'' விளையாட்டு மைதானத்தையும் ''ஹார்டின்ஜ்'' மாணவர் இல்லத்தையும் ஏற்படுத்தினர். அப்போது பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தவர் ராவ் பகதூர் கே. சேஷ அய்யர் அவர்கள். தஞ்சை மாவட்டத்திலேயே சிறந்ததெனக் கூறப்பட்ட ஒரு ரசாயன சோதனைச் சாலையை நிறுவி, அதற்குத் தேவையான கட்டிடத்தையும் கட்டி முடித்தார்.

மகா கனம் ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் 1889–1892 வரை இப்பள்ளியில் ஆசிரியராக இருந்தார் என்பது பெருமைக்கு உரியது.

பிரபல வழக்கறிஞரான ஸ்ரீ டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி, இலக்கிய மேதை காவேரிப்பட்டிணம் ஸ்ரீ கே. எஸ். வெங்கடரமணி, ''கல்கி'' ரா. கிருஷ்ணமூர்த்தி முதலியவர்கள் இப் பள்ளியில் படித்தவர்கள்.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த இப்பள்ளியின் கட்டிடங்கள் மிகவும் சிதிலமடைந்துள்ளன. அவற்றைப் புதுப்பிக்கப் பல லட்சம் ரூபாய் தேவை.

மார்ச் மாதத்தில் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாட முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி: பொருளாளர், நகராட்சி உயர்நிலைப் பள்ளி நூற்றாண்டு விழாக் கமிட்டி, நகராட்சி உயர்நிலைப் பள்ளி, மாயூரம்-609001, தஞ்சை மாவட்டம்.

— என். ராமகிருஷ்ணு

---

போய், ''எனக்கு ஒரு 'ஸ்கெட்ச்' இங்கிலாந்து நாட்டுக்குக் கொண்டு போகப் போட்டுத் தரணும்! அப்படியானல் எல்லோரது ஆட்டோகிராப்பும் வாங்கித் தந்துவிடுவேன்'' என்று நிபந்தனை போட்டார். வினு மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். சில விநாடிகளில் மற்ருெரு 'பாரிங்டன்' சித்திரம் தயாராகியது.

''மிஸ்டர் பாரிங்டன்! நீங்கள் இந்தப் படத்துக்கு இரண்டு பவுண்டு கொடுக்கணும்'' என்று அருகிலுள்ள தமிழகக் கிரிக்கெட் சங்க நிர்வாகிகளில் ஒருவரான திரு கிருஷ்ணசாமி சொன்னர்.

''நான்தான் கையெழுத்து வாங்கித் தந்துவிடப் போகிறேனே!'' என்று சொல்லிவிட்டு பெவிலியன் அறைக்குள் நழுவினர் மானேஜர் பாரிங்டன்!

● ● ●

எம். ஸி. ஸி. குழு சேப்பாக்கம் மைதானத்தில் 'ஹாட்ரிக்' கண்டு தன் புகழை நிலைநிறுத்திக் கொண்டு விட்டது! தொடர்ந்து மூன்று ஆட்டங்கள் வெற்றி.

வெற்றி பெற்ற காப்டன் டோனி கிரெய்க்கை வில்லிஸும் லிவரும் தூக்கிக் கொண்டு பெவிலியனுக்கு வந்தார்கள். அது மட்டுமல்ல; 'ஹாட்ரிக்' வெற்றி ஸ்டம்ப் குச்சிகளோடு டோனி கிரெய்க் தம் ஆட்டக்காரர்களுடன் சிதம்பரம் ஸ்டேடியத்தைப் பவனி வந்தார்!

இந்தியக் கிரிக்கெட் சரித்திரத்திலேயே பாட்டிங் இவ்வளவு மோசமாக அமைந்ததில்லை என்று கூறத்தக்க அளவுக்கு இந்த இங்கிலாந்து விஜயத்தின்போது கடந்த மூன்று மாட்சுகளிலும் நம்மவர் ஆடியிருக்கின்றனர். கிரிக்கெட்டில் வெற்றி தோல்வி சகஜம், அதிர்ஷ்டமும் வேண்டும் என்றெல்லாம் மனத்தைச் சமாதானப்படுத்திக்கொண்டாலும் இந்தப் பாட்டிங் வெட்கித் தலைகுனிய வேண்டிய அளவில் இருந்தது என்பதை மறைக்க முடியவில்லை, மறப்பதும் சாத்தியமில்லை.

அகில இந்திய ரேடியோ, நிபுணர் அபிப்பிராயம் தெரிவிக்கச் சரியான ஆளைப் பிடித்தது. படோடி நவாபின் 'கமெண்ட்ஸ்' அருமை. அவர் கூறினர்: ''முப்பத்தைந்து வயதான ஒருவன் இந்தப் போலிங்கை எதிர்த்துப் பத்து ரன்தான் எடுப்பான் என்ருல் அந்தப் பத்து ரன்னை எடுக்க இருபத்தைந்து வயதான ஒருவனையே தேர்ந்தெடுத்திருக்கலாமே? எதிர்காலத்துக்குத் தேவையான டெஸ்ட் அனுபவமாவது அவனுக்குக் கிட்டுமல்லவா?''

மானேஜர் பாரிங்டன் அரசியல்வாதிகளைத் தூக்கி அடிப்பது போல் ரொம்ப சாணக்கியத்துடன் நடந்து கொண்டார். அ. இ. ரே.யில் எத்தனை கேட்டும் நம் பாட்டிங் பற்றி ஒரு வார்த்தை கூற வேண்டுமே? மூச்! நழுவல்தான்.

கிரெய்க்கின் தலைமை அபாரம். நாலு பௌலர்களையும் அவர் மாற்றி மாற்றிப் பயன்படுத்திய முறை நற்பலனைக் கொடுத்தது. சமயத்தில் வூல்மரைப் போடச் செய்து தாமும் கூடப் பந்து வீசினர்.

சென்னை டெஸ்ட் நடந்து கொண்டிருக்கும்போதே ஆஸ்திரேலியாவுக்கு எதிராக பாகிஸ்தான் பெற்ற வெற்றி நமக்கொரு பாடம்.

# சரித்திரம் படைத்தவரின் சரித்திரம்!

"சத்தியாக்கிரஹம் என்றால் சட்டத்தை மீறுவது என்பதாகப் பலர் எண்ணுகிறார்கள். அந்தக் கருத்து தவறு. சத்தியாக்கிரஹம் என்பது சட்டத்தை நிறைவுபடுத்துவதாகும்!''

அண்மையில் சென்னைக்கு வந்த ஆசார்ய கிருபளானி இப்படிக் கூறி அவையோரைச் சிந்திக்க வைத்தார். தொடர்ந்து ஒரு விளக்கத்தையும் அவரே கூறினார்: ''சட்டத்தை மீறுகிறவன் அதற்காக விதிக்கப்பட்ட தண்டனையிலிருந்தும் தப்பிக்கப் பார்க்கிறான். ஆனால் சத்தியாக்கிரஹி அப்படியல்ல. சட்டத்தை மீறுவதால் கிடைக்கப் போகும் தண்டனை என்ன என்பதை முன்னமேயே உணர்ந்து அதனை எதிர்பார்த்து, அனுபவிக்கவும் தயாராகி விடுகிறான். எனவேதான் சத்தியாக்கிரஹி சட்டத்தை மீறுபவன் அல்ல; சட்டத்தை நிறைவுபடுத்துபவனாகிறான். இந்த விளக்கம் என்னுடையதல்ல; காந்திஜியே கூறியதுதான். அஹிம்சை என்ற ஆயுதத்தை நாம் கைவிடாத வரையில் கவலைப்பட வேண்டாம். அநீதி எந்த உருவில் எப்போது வந்தாலும் அதனைத் தைரியமாக எதிர்த்து நிற்கலாம்.''

கிருபளானிக்கு முன்னதாகப் பேசிய க. சந்தானம், ''அஹிம்சா மார்க்கம் என்றால், என்ன நடப்பினும் பொறுத்துக் கொண்டு பணிந்து போவதல்ல; அநீதிக்கு எதிராக சாத்துவிக முறையில் நமது எதிர்ப்பை வன்மையாகத் தெரியப்படுத்துவதுதான்'' என்றார்.

இந்தக் காந்தியக் கருத்துக்களை நூற்றுக்கு நூறு உணர்ந்து வாழ்நாளெல்லாம் கடைப்பிடித்தவர் ராஜாஜி. ''எனது மனச்சாட்சியின் காவலர்'' என்று காந்திஜி ராஜாஜியை வர்ணித்தார். அந்தச் சொற்றொடர் விடுதலைப் போராட்டக் காலத்தை விட, தேசம் சுதந்திரம் பெற்ற பின்னர் அதிக அர்த்த முள்ளதாக விளங்கியது. காந்திஜியின் தலைமையில் அந்நியர் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிய ராஜாஜி, சுதந்திரத்துக்குப் பின், அண்ணலின் மறைவுக்குப் பிறகு வேறு ஒரு விதமான சுதந்திரப் போராட்டத்தைத் தொடர்ந்தார். இப்போது லட்சிய நோக்கம் வேறாக இருந்தது. ஆனால் அந்த உன்னத லட்சியத்தை அடையும் மார்க்கம் அதே அச்சமற்ற சாத்துவிக எதிர்ப்புத்தான். அரசோ மக்களோ, தொழிலதிபர்களோ தொழிலாளர்களோ, விரோதி நாடோ நட்புறவு பூண்ட தேசமோ, பெருந் தலைவரோ தொண்டரோ யாராயினும் சரி, பட்சபாதம் இன்றி அவர்கள் செய்த தவறுகளை ராஜாஜி கண்டித்தார்; நற்பணிகளைப் போற்றினார்.

காந்தியத் தத்துவப்படி நடப்பதாகக் கூறிக் கொண்டே சிலர் தவறு இழைத்த போதும் அவர் அதனைக் கண்டிக்கத் தயங்கவில்லை. உதாரணமாக உண்ணாவிரதத்தைச் சிலர் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ள ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துவதைப் பார்த்து ராஜாஜி வேதனையுடன் சிரித்தார். 'இத்தகைய உண்ணாவிரதங்கள் ''பிளாக் மெயில்'' தவிர வேறில்லை' என்றார். உண்ணாவிரதத்தை ஆத்ம சுத்திகரிப்புக்காக காந்திஜி பயன்படுத்தினாரேயன்றித் தமது கருத்துப்படியே எல்லோரும் நடந்து கொள்ள வேண்டும் என்ற எதேச்சாதிகாரப் பிடிவாதத்துடன் அல்ல. மக்கள் தவறுகள் பல செய்யாமல் தடுக்கும் ஆன்ம சக்தி தமக்கு இல்லையே என்று மனம் வருந்தித் தம்முடைய அந்தக் குறை நீங்குவதற்காக உண்ணாநோன்பு இருந்த உத்தமர் அவர்.

இதே போல் வேறு பல காந்தியக் கருத்துக்களையும் மேலெழுந்த வாரியாக மற்றவர் பார்ப்பதற்கும் ராஜாஜியின் ஆழ்ந்த தெளிந்த நோக்குக்கும் பெருமளவு வித்தியாசம் உண்டு. காரணம், பாரதத்தின் ரிஷிகள், மேனாட்டு மேதைகள் ஆகியோரது உயர் தத்துவங்களை உணர்ந்து அறிந்து அந்த அடிப்படையில் காந்தியத்தை ராஜாஜி புரிந்து கொண்டதுதான். வேத உபநிஷத்துக்கள், இதிகாச புராணங்கள், வள்ளுவர் வாசகங்கள் ஆகியன பால் என்றால், ஸாக்ரதர் முதல் தோரோ வரையில்

கல்கி மலர் 36 இதழ் 27



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

பல்வேறு மேனாட்டு ஞானிகளின் அறிவுரைகள் மணம் மிக்க டிகாக்ஷன்; காந்தீயம் இதில் சேர்ந்த சர்க்கரை! மூன்றும் இணைந்து ராஜாஜி விரும்பிப் பருகிய காப்பியாயிற்று.

காந்தீயத்தில் ஊறித் திளைத்திருந்தபடியால்தான் பஸிபிக் கடலில் அணுகுண்டுச் சோதனை நடக்கப் போகிறது என்று அறிந்ததும் இந்தியா சாத்துவிக மறுப்புத் தெரிவிக்கும் வகையில் அவ்விடத்துக்கு ஒரு சிறு கப்பலை அனுப்பி வைக்க வேண்டும் என்று கோரினார் ராஜாஜி. அந்தக் கப்பலில் பயணப்படத் தயாராக உள்ள முதல் சத்தியாக்கிரஹியாகத் தம் பெயரையே அறிவித்தார்.

சர்வோதய தினத்தன்று தேசத்துக்காக உயிர்த் தியாகம் புரிந்த செம்மலை மனத் தூய்மையுடன் நமஸ்கரிப்போம். அண்ணல் காந்தியடிகளுக்கு அஞ்சலி செலுத்தும் போதே ராஜாஜியையும் சேர்த்து வணங்குவோம்.

இந்த இரு மாபெரும் தலைவர்களின் பேரனாகப் பிறக்கும் பாக்கியம் பெற்ற ராஜ்மோகன் காந்தி எழுதி வரும் ராஜாஜியின் வாழ்க்கை வரலாறு சுயராஜ்யா பத்திரிகையில் தொடங்க, சர்வோதய தினத்தை விடச் சிறந்த நாளைத் தேர்ந்தெடுக்க முடியாது. 29-1-77 தேதியிட்ட சுயராஜ்யா இதழ் ராஜாஜியின் வாழ்க்கை வரலாற்றின் முதல் அத்தியாயத்தைத் தாங்கி வெளி வருகிறது. 30-1-77 சர்வோதய தினத்தன்று எல்லா இடங்களிலும் கிடைக்குமாறு அனுப்பப்படுகிறது.

காந்திஜி — ராஜாஜி ஆகியோரின் பேரன் என்பதால் மட்டும் ராஜ்மோகனை இந்த வரலாற்றினை எழுதத் தேர்ந்தெடுக்கவில்லை. ராஜாஜி வாழ்க்கை வரலாற்றுக் குழுவினர், ஆழ்ந்த யோசனைக்குப் பின்னர் ராஜ்மோகனைத் தேர்ந்தெடுத்ததற்கு வேறு பல காரணங்களும் உண்டு.

மிகக் குறுகிய காலத்தில் தமக்கென்று ஒரு தனித்தகுதியை வளர்த்துக் கொண்டு விட்டவர் திரு ராஜ்மோகன், எம். ஆர். ஏ. என்ற, மக்களிடையே ஒழுக்கத்தை வளர்க்கும் உன்னத உலக ஸ்தாபனத்தின் தலைவர்களுள் ஒருவர். ஹிம்மத் பத்திரிகையின் ஆசிரியர். சுதந்திரமான சிந்தனையும் முற்போக்கான கருத்துக்களையும் உடையவர். ஆங்கிலத்தில் பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் குறைவின்றிப் பெற்றவர். உலகம் சுற்றி வந்த அனுபவங்கள் அடைந்தவர். பெருந்தலைவர்களாயினும் எளியோராயினும் அவரவருக்குத் தக்கபடி பேசிப் பழகக்கூடிய திறன் படைத்தவர். இளைஞர். இது போன்ற ஒரு காரியத்துக்குத் தேவைப்படும் சுறுசுறுப்பும் விடாப்பிடியான ஆராய்ச்சி மனப்பான்மையும் கொண்டவர்.

இப்படி பல உயர்ந்த தன்மைகளைக் கொண்டிருப்பவர் தோள்கள் மீது இந்தப் பொறுப்பு இறங்கியது மிக இயல்பான ஒரு காரியமே. அவரும் சுமையை மகிழ்ச்சியுடன் தாங்கிச் சிரத்தையுடன் காரியத்தைச் செவ்வனே நிறைவேற்றி வருகிறார்.

இதற்காக அவர் எடுத்துக் கொண்ட பிரயாசைகள், அப்போது அடைந்த அனுபவங்கள் எல்லாம் கூறப் போனால் அதுவே ஒரு சிறு நூலாகி விடும். அதையும் பின்னால் ஒரு சந்தர்ப்பத்தில் ராஜ்மோகன் எழுதுவார் என்று எதிர்பார்ப்போம்.

இப்போதைக்கு ராஜ்மோகன் காந்தி எழுதும் ராஜாஜியின் வாழ்க்கை வரலாற்றினை சுயராஜ்யாவில் தொடர்ந்து படித்து இன்புறுவோம். சில மாதங்களுக்குப் பிறகு அதன் தமிழாக்கத்தையும் கல்கியில் தொடர்ந்து படித்து இரட்டிப்புப் பயன் பெறுவோம்.

மேலட்டைச் சித்திரங்கள்: ஜெர்மானிய ஓவியர்: **E. GNADIG**

ராஜ்மோகன் புகைப்படம்: **உத்ரா.**

# இரண்டாவது குடியரசு உதயம்!

**டி**ல்லி நாடாளுமன்றத்துக்குத் தேர்தல்கள் மார்ச்சு மாதம் நடக்கும் என்ற பிரதமரின் அறிவிப்பைப் பாரதத்தில் இரண்டாவது குடியரசு உதயத்துக்கு முன்னறிவிப்பாகக் கருதலாம். முப்பதாண்டுகளுக்கு முன்னதாக ஜனநாயகம் ஒன்று உதயமாகி நாளடைவில் அது பொறுப்பற்ற பலரது நடவடிக்கைகளால் அராஜகமாக மாறிவிடக் கூடிய நிலைமையை

ராஜாஜி சிந்தனை

## முதனூல்

வேதாந்தத்துக்கு முதல் நூல் உபநிஷத்து. உபநிஷத்து படிக்காதவன் இந்தியப் பண்பாட்டைப் பூரணமாக அறிந்ததாகச் சொல்லிக் கொள்ள முடியாது.

பழைய நூல்களைப் படிக்கும்போது நேற்று எழுதின புத்தகங்களைப் போல் அவை இருக்கும் என்று எதிர்பார்த்து ஏமாற்றம் அடையக் கூடாது. அவை தோன்றிய காலத்தில் உலகமும் தேசமும் மக்கள் வாழ்க்கையும் தேசாசாரமும் முற்றிலும் வேறு நிலையில் இருந்தன. இதை மறந்துவிட்டு, தற்காலத்தில் விவாதிக்கப்பட்டு வரும் விஷயங்களை மனத்தில் வைத்துக் கொண்டு, மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பு எழுதப்பட்ட பழைய நூல்களை விமர்சனம் செய்யக் கூடாது. ஒவ்வொரு நூலும் அது தோன்றிய காலத்து வாழ்க்கையை யொட்டித்தான் பேசும். நம்முடைய கற்பனா சக்தியையும் அறிவையும் செலுத்தி அக்காலத்து வாழ்க்கையை வைத்து முன்னோர் எழுதிய நூல்களைப் படிக்க வேண்டும்.

- ''அச்சமில்லை'' என்ற புத்தகத்தில்


திடீர்த் தாக்குதல்!
தேர்தல்
தேர்தல்
ஜனதா கட்சி


சபாஷ்!
இந்திரா காங்கிரஸ்
20+5
அம்ச திட்டம்


வருவீர்! சேருவீர்!!
தேர்தல்
கூட்டுக்குத்
தயார்!
—தி.மு.க—



அஹோபிலபுரி என்றால் எது? அது எங்கே இருக்கிறது? - தெரியுமா? இந்தக் கேள்விக்கு பிலாய் நகரம் விடையளிக்கிறது. பிலாய் தான் அஹோபிலபுரியாம். பக்திக்குப் பிறப்பிடம் தென்னாடு என்பதனால், தென்னாட்டிலிருந்து சென்றவர்கள் பக்திக்குரிய ஸ்ரீ ஸித்தி விநாயகருடன் அவர் தம்பி ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத கல்யாண சுப்ரமணியர், ஸ்ரீ சீதா லக்ஷ்மண ஹனுமந்த் ஸமேத ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி, நவக்கிரகங்கள் முதலிய தென்னாட்டுப் பரிவாரத் தெய்வங்களுக்குக் கோயில் எடுத்துக் குடமுழுக்குச் செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள். தமிழ்நாட்டின் முன்னாள் தொழிலமைச்சரும் 'ஸ்வராஜ்யா' பத்திரிகையின் ஆசிரியருமான ஸ்ரீ ஆர். வெங்கடராமன் தலைமையில் 2-2-77 அன்று குடமுழுக்கு நடைபெறுகிறது. இத் திருப்பணிக்கு நிதி உதவ விரும்புவோர், பிலாய் தமிழ் மன்றம், 5-ஏ, 21-வது தெரு, 10-வது செக்டர், பிலாய்.ம.பி, என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.

---

நெருங்கியது. தக்க தருணத்தில் இந்தப் போக்குக்கு ஒரு முடிவு கட்டித் தேசம் முழுவதிலும் புத்துணர்ச்சியும் புதிய எழுச்சியும் ஏற்படுமாறு செய்தார் நமது பிரதமர். பொறுப்பு உணர்ச்சி திரும்பியது. தேசப் பற்று மிகுந்தது. நாட்டின் மேன்மைக்கு உழைக்க வேண்டும் என்ற ஆர்வம் மக்களிடையே வளர்ந்தது.

ஆனால் இதே நேரத்தில், 'பிரதமர் ஜனநாயகப் பாதையிலிருந்து திரும்பி விட்டார்; எதேச்சாதிகாரப்-போக்கில் செல்கிறார்' என்ற குற்றச்சாட்டு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் சிலரிடையே கிளம்பியது. அவர்கள் எல்லோரையும் வெட்கித் தலைகுனிய வைத்து விட்டார் பிரதமர். பிரதமரை மிக நன்றாக அறிந்திருந்தவர்கள் கூட இவ்வளவு சீக்கிரமாக அவர் தேர்தலுக்கு உத்தரவிடுவார் என்று எதிர்பார்க்கவில்லை. எல்லாரையும் வியப்பு கலந்த மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி விட்டிருக்கிறார். தேர்தலை முன்னிட்டு நெருக்கடி நிலைச் சட்டங்களைத் தளர்த்தி விருப்பதும் பத்திரிகைத் தணிக்கையை நீக்கியிருப்பதும் மகிழ்ச்சியை மேலும் அதிகரித்துள்ளன.

லோக சபைக்கு மட்டும் தேர்தலை அறிவித்ததில் பிரதமரின் சாணக்கியத்தைக் காண்கிறோம். பாரதம் ஜனநாயகப் பாதையிலிருந்து விலகவில்லை என்று உலகுக்கு உணர்த்தும் அதே நேரத்தில், தேசத்தில் தேர்தல்கள் காரணமாக உருவாகக் கூடிய குழப்பங்கள், பூசல்கள், மனமாச்சரியங்கள், கால விரயம் எல்லாவற்றையும் குறைத்த பட்சமாக்கியுள்ளார். தேர்தல் அவசியம் தான்; ஆனால் தேர்தலே ஜனநாயகமாகி விடாது. போகிற போக்கில் தேர்தலை முடித்துக் கொண்டு தேசத்தைப் பல்வேறு துறைகளிலும் உன்னத நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டிய கடமை ஒவ்வொரு குடிமகனுக்கும் இருக்கிறது. எனவே இப்போதைக்கு நாடாளுமன்றத்துக்கு மட்டும் தேர்தலை அறிவித்ததை வரவேற்கலாம்.

கடந்த சில மாதங்களில் பிரதமரின் செல்வாக்கு அடாிமிதமாக மக்களிடையே வளர்ந்திருக்கிறது. ஆகவே அவர் பெரும்பான்மை பலத்துடன் மீண்டும் பதவிக்கு வருவதற்கான சாத்தியக்கூறுகளே அதிகம் உள்ளன. மேலும் மத்திய நாடாளுமன்றத்துக்கு மட்டுமே தேர்தல் நடக்கும் போது பிராந்தியக் கட்சிப் பற்றுள்ளவர்களில் கூடப் பலர் அகில இந்தியக் கட்சியான காங்கிரஸுக்கே வோட்டு அளித்தால் வியப்பதற்கில்லை.

எதிர்க் கட்சியினரை எதிர் நோக்கியுள்ள பணி ரொம்ப சிரமமானதுதான். அவர்களுக்கு மக்களிடம் இருந்த செல்வாக்கு கணிசமாகக் குறைந்து போயிருக்கிறது. மிகக் குறுகிய காலகட்டத்தில், இரண்டே மாதங்களில் அதனைத் திரும்பப் பெறப் பிரயாசை எடுக்க வேண்டியிருக்கிறது. உதிரிக் கட்சிகளாக உள்ளவர்கள் இணைந்து செயலாற்ற முயற்சி நடக்கிறது. ஒரே எதிர்க்கட்சியாக ஐக்கியமாவது சாத்தியமற்ற நிலையில் தேர்தலை முன்னிட்டு மட்டும் ஜனதா கட்சி என்று ஒரு பெயரை சூட்டிக் கொள்வதென்று முடிவு செய்து இருக்கிறார்கள். அனைவருக்கும் சேர்த்து ஒரே தேர்தல் சின்னத்தை ஒதுக்கக் கோரியுள்ளார்கள். தேர்தல் கமிஷன் இந்த வேண்டுகோளுக்கு இணங்குமா என்பது தெரியவில்லை. 'நான்கு தலைகள் - தலைப்பாகை மட்டும் ஒன்று' என்ற நிலையில் உள்ள ஜனதா கட்சியின் கொள்கைகள் என்ன, அது காங்கிரஸ் திட்டங்களிலிருந்து எப்படி மாறுபட்டு மக்கள் கவனத்தைக் கவரப் போகிறது என்று தீர்மானமாகவில்லை. இத்தனை சிக்கல்கள் இருப்பினும் வெற்றி தோல்விகளைப் பற்றிக் கவலைப்படாமல் மெய்யான ஜனநாயகப் பணியாற்ற எதிர்க் கட்சிகள் முன்வர வேண்டும். டிசம்பர் மத்தியில் புது தில்லியில் கூடி, கொடுத்த வாக்குறுதிகளை இம்மி பிசகாமல் கடைப்பிடிக்க வேண்டும். அலகாபாத்தையும் அதன் பின்னர் நடந்தவற்றையும் துர்சொப்பனமாக எண்ணி அடியோடு மறந்து விட்டுப் பாரத ஜனநாயகத்தில் ஒரு புதிய சகாப்தம் தொடங்க வழிவகுக்க வேண்டும்.

மக்களாட்சி புத்தம் புது மலராக இங்கு இதழ் விரித்து மணம் பரப்பட்டும்.

# "ஆறு கால்" ஸ்தோத்திரம் ④



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

"சுக்லாம்பரதரம்" ச்லோகத்தை எடுத்துக் கொண்டு அதில் (உயிரெழுத்து சீரியில்) எத்தனை அக்ஷரம் இருக்கிறது என்று பார்த்தால்

க லா பரதர வி ஷு | சசி வ ண ச து பு ஜ
க் ம் ம் ஷ் ம் | ர் ம் ர் ம்

ர ஸ ன வதன யா யே | ஸ வ வி நோ ப சா த யே
ப் ன் ம் த் த் | ர் க் ந்

32 அக்ஷரம் கணக்கு வருகிறது. இது எட்டெட்டு எழுத்து கொண்ட நாலு பாதங்களாகப் பிரிந்திருக்கிறது. 'சுக்லாம்பரதரம் விஷ்ணும்' என்பது முதல் பாதம். 'சசிவர்ணம் சதுர்புஜம்' இரண்டாம் பாதம். 'ப்ரஸன்ன வதனம் த்யாயேத்' என்பது மூன்றும் பாதம். 'ஸர்வ விக்நோப சாந்தயே' என்பது நாலாவது பாதம்.

சரி, அப்படியானால் 'ஷட்-பதீ' என்கிற 'ஆறுகால் ஸ்தோத்திர'த்தில் ஒவ்வொரு ச்லோகத்திலும் இப்படி ஆறு அடிகள் இருக்கின்றனவா? இல்லை.

இந்த 'ஷட்பதீ' ஸ்தோத்திரத்திலே ச்லோகத்துக்கு ச்லோகம் அக்ஷரங்கள் வெவ்வேறு கணக்கில் வருகின்றன. எல்லாம் ஒரே சந்தஸில் (சந்தத்தில்) இல்லை. ஒரு ச்லோகத்தை எடுத்துக் கொண்டால் அதற்குள்ளே வருகிற பாதங்களும் 'சுக்லாம் பரதர'த்தில் இருக்கிற மாதிரி சமமான அக்ஷரம் கொண்டதாக இல்லை. ஆனாலும் சொல்கிற போதோ, சீரில்லாத மாதிரிக் கொஞ்சம் கூடத் தோன்றாமல், வார்த்தைகளும், எண்ணங்களும், சப்தங்களும் ரொம்பவும் இசைவாகப் போகிற அழகான போக்கிலேயே குழந்தைகூட நினைவு வைத்துக் கொள்ளும்படியாக அவ்வளவு சுலபமாக இருக்கிறது.

பலச்ருதி மாதிரி இருக்கிற கடைசி ச்லோகத்தை விட்டு விட்டால் இதிலே ஆறு ச்லோகங்கள் இருக்கின்றன.

பலச்ருதி "மாதிரி"தான்; அசல் பலச்ருதி இல்லை. அசல் பலச்ருதி என்றால், 'இந்த ச்லோகத்தைச் சொல்பவருக்கு இன்னின்ன பலன்கள் உண்டாகும்' என்று உடைத்து வியக்தமாகச் சொல்லியிருக்க வேண்டும். இங்கே கடைசி ச்லோகத்தில் அப்படிச் சொல்லவில்லை. அதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். கடைசி ச்லோகத்தைக் கடைசியில் தானே சொல்ல வேண்டும்? முதல் ச்லோகத்திலிருந்து வரிசையாகச் சொல்லிக் கொண்டு போகிறேன். முதல் ச்லோகத்தை ஆரம்பிக்கு முன் இப்போது டைட்டில், 'ஷட்-பதீ' என்பது என்ன என்று சொல்ல ஆரம்பித்தேன்.

இதிலே ஆறு ச்லோகங்கள், பலச்ருதி நீங்கலாக உள்ளன.

அதனால் 'ஷட்-பதீ' என்று ஆசாரியாள் டைட்டில் கொடுக்கிற போது, 'பதம்' என்றால் ஒரு ச்லோகத்தின் ஒரு பாகம் என்று அர்த்தம் கொடுக்காமல், ஒரு முழு ச்லோகத்தையே 'பதம்' என்று குறிப்பிடுவதாகத் தெரிகிறது. 'பதம்' என்ற வார்த்தை பல அர்த்தத்தில் பிரயோகமாகிறது. வேதத்தில் 'பதம்', 'க்ரமம்' என்று சொல்லிக்கொண்டே போய் 'கனம்' என்பதில் முடிப்பார்கள். மந்திர அக்ஷரங்களைப் பல விதங்களில் மாற்றி மாற்றிக் கோத்து வாங்கிச் சொல்வதுதான் 'பதம்', 'க்ரமம்', 'கனம்' எல்லாம். 'கனம்' வரைக்கும் தேர்ச்சி பெற்றவரைத்தான் 'கனபாடி' என்பது. இங்கே 'பதம்' என்றால் வார்த்தை வார்த்தையாகப் பிரித்துச் சொல்வது. ஆனால் முழு ச்லோகத்தையே 'பதம்' என்கிற பிரயோகமும் இருக்கிறது. தமிழில் கூட ஒரு பதிகத்தையோ பாசுரத்தையோ குறிப்பிட்டு அதில் எத்தனை செய்யுள் இருக்கிறது என்று கேட்பதற்குப் பதில் எத்தனை அடி இருக்கிறது?' என்று கேட்கிறோம். இங்கே 'அடி' என்றால் செய்யுளின் ஒரு பாகம் என்று அர்த்தமாகாமல், முழுச் செய்யுள் என்றே ஆகிறது. இப்படியேதான் ஒரு கீர்த்தனம் என்று எடுத்துக் கொண்டாலும், நாலைந்து சரணம் இருந்தால் 'எத்தனை அடிகள்?' என்றே கேட்கிறோம். இதிலே இன்னொரு வேடிக்கைகூட... ச்லோகமாக இருந்தால் 'பதம்', 'பாதம்' என்கிறோம். பாட்டாக, கீர்த்தனமாக இருந்தால் 'சரணம்' என்கிறோம். 'பாதம்' என்பது போலவே 'சரணம்' என்றாலும் கால்தான்.

அடி மேல் அடி வைத்து முன்னே போவதை 'பதேபதே' என்று சொல்வார்கள். Step by step என்று அர்த்தம். இப்படியே பக்தியில் அடி மேல் அடி வைத்து, ஒவ்வொரு

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

ச்லோகத்தின் வழியாக முன்னேற வழி சொல்கிறதாலும் இது 'ஷட்-பதி' என்று வைத்துக் கொள்ளலாம்.

இதிலே ஒரு ச்லேஷை (சிலேடை)யும் இருக்கிறது. 'பதம்' என்றால் 'கால்' அல்லவா? ஷட்-பதி என்றால் 'ஆறு-கால் கொண்ட ஜந்து' என்று அர்த்தம்.

'ஆறுகால் ஜந்துவாவது? விசித்திரமாயிருக்கிறதே!' என்று தோன்றும். மனுஷ்யன் இரண்டு கால் பிராணி. மிருகங்கள் நாலு கால் பிராணி. எட்டுக்கால் பூச்சி என்று ஒன்று இருக்கிறது. காலே இல்லாதது பாம்பு. மரவட்டைக்கு எண்ணி முடியாத கால்கள். ஆறு கால் ஜந்து என்ன?

அதுதான் வண்டு. வண்டுக்கு ஆறு கால் தான் இருக்கும். ஷட்-பத, ஷட்-பதீ என்றால் வண்டு என்று அர்த்தம்.

ஆறு பதம் (ச்லோகம்) உள்ள இந்த ச்லோகத்துக்கு ஏன் 'வண்டு-ஸ்தோத்திரம்' என்று பேர்? இந்த சிலேடையை ஆசார்யாள் கடைசியான ஏழாவது ச்லோகத்தில்தான் புதிர் அவிழ்க்கிறார். ஒரு கதைசொல்கிறவர் அதில் மர்மமாக ஒன்றை ஆரம்பத்தில் சொல்லிவிட்டு, அதை உடனேயே புதிர விழ்த்து விடாமல் கடைசி வரை மூடி மூடி வைத்து, ஆர்வத்தை ஜாஸ்தியாக்கிக் கொண்டே போய்க் கடைசியில்தான் உடைப்பார். அதேமாதிரி 'ஷட்-பதீ' என்று ஸ்தோத்திரத்துக்கு டைட்டில் கொடுத்த ஆசாரியாரும் ச்லோகம் முடிகிற போது தான் இதற்கு ஏன் 'ஆறுகால் ஸ்தோத்திரம்', அதாவது 'வண்டு ச்லோகம்' என்று பேர் கொடுத்தார் என்று விண்டு சொல்கிறார். காவியங்களிலும் பக்தி கிரந்தங்களிலும் ஈடுபட்டவர்களுக்கு, ரஸிகர்களுக்கு, அவர் சொல்லா விட்டாலும் ஆரம்பத்திலேயே புரிந்து விடும்.

உங்களில் கொஞ்சம் பேருக்கு இப்போதே ஷட்பதீ (வண்டு) என்பதிலுள்ள சிலேடை புரிந்திருக்கலாம். புரியாதவர்களுக்கு நானும் ஆசார்யாள் மாதிரியே கடைசியில்தான் புரிய வைக்கப் போகிறேன். (தொடரும்)

---

## செய்தி மணிகள்

○ நம் நாட்டில் கடந்த ஆண்டில் தங்கம் உற்பத்தி 10 சதவீதம் கூடியுள்ளது. கர்நாடக அரசுக்குச் சொந்தமானது ஹட்டி தங்கச் சுரங்கம். இன்னொன்று பாரத் தங்கச் சுரங்கம். இவை இரண்டும் கடந்த ஆண்டில் 3,119 கிலோ தங்கத்தை உற்பத்தி செய்துள்ளன.



படம்: சென்னை மெரினா கடற்கரையில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள கலங்கரை விளக்கத்தை மத்திய மந்திரி தில்லான் சமீபத்தில் திறந்து வைத்தார்.



○ சென்னை மெரினா கடற்கரையில் புதிதாகக் கட்டப்பட்டுள்ளதே கலங்கரை விளக்கம் - இதில் உள்ள விளக்கின் ஒளி 24 லட்சத்து 40 ஆயிரம் மெழுகு வர்த்திகளின் வெளிச்சத்தைக் கொண்டது. கடல் மட்டத்திலிருந்து 190 அடி உயரமுள்ள இந்தப் புதிய கலங்கரை விளக்கத்தில் முக்கோண வடிவமும், மின்சார லிஃப்ட்டும் நவீன அம்சங்கள். கலங்கரை விளக்கத்தின் கோபுரம் 45 மீட்டர் உயரம் உள்ளது.

○ இதுவரை சுமார் 29 லட்சம் ஏக்கர் நிலங்கள் உச்சவரம்பாக அறிவிக்கப்பட்டுள்ளது. இதில் இதுவரை 10 லட்சத்து 30 ஆயிரம் ஏக்கர் நிலங்கள் விநியோகிக்கப்பட்டுள்ளன.

○ 'இந்திய உணவு கார்ப்பரேஷன்' நிறுவனம் கடந்த டிசம்பர் 1-ந் தேதியன்று இருப்பில் வைத்திருந்த உணவு தானியங்கள் அளவு 1 கோடியே 43 லட்சத்து 90 ஆயிரம் டன்கள்! இந்த இருப்பு அளவு இந்திய உணவுக் கார்ப்பொரேஷனைப் பொறுத்தவரை ஒரு புதிய 'ரிகார்ட்!

○ குஜராத் மாநிலம் மெஹ்சானா மாவட்டம் படேபூரைச் சேர்ந்த சிறுமி பாம் செபார்பென். இந்தச் சிறுமியின் வீர தீர செயல்களைப் பாராட்டி 'ஜீவன் ரக்ஷா' பதக்கம் வழங்க ராஷ்டிரபதி ஒப்புதல் தந்துள்ளார். அப்படி என்ன துணிச்சலான காரியத்தை பாம் செபார்பென் செய்துவிட்டாள்? வெள்ளத் தண்ணீரில் சிக்கி, தத்தளித்து உயிருக்குப் போராடிய 29 பேரை இந்தச் சிறுமி ஒருத்தியே காப்பாற்றிக் கரை சேர்த்து இருக்கிறாள். இந்தச் சம்பவம் 1975, செப்டம்பர் 12 தேதி நடைபெற்றது.

# விஞ்ஞானக் கதைகளும் வியப்பூட்டும் நிலைகளும்!

தேவைகள் அதிகரிக்கும்போது, அவை மனிதனை நெருக்கும் போது, ஒருதீர்வு அங்கே இன்றியமையாததாக விளங்கும்போது, அங்கே பிறப்பது விஞ்ஞானம். விஞ்ஞானத்தின் வளர்ச்சிக்கேற்ப மனிதனின் சுகங்களும் பெருகியுள்ளன. உடலும், உள்ளமும் தேடும் சுகங்களை அவை தருகின்றன. மனிதனின் தேவைகளைப் பூர்த்தி செய்ய எழுந்த விஞ்ஞானம், அவன் அறிவுப் பசிக்கு உணவாக அமைந்த விஞ்ஞானம், அவனை அடிமை செய்யக் கூடாது.

அழகிய உலகைக் கவர் கட்டாமலேயே தேசங்களாகப் பிரித்து நாட்டுக்கு நாடு விரோதங்களை வளர்த்துக் கொண்டு மனிதன் வாழ்வதால் அவன் மனம் இன்னும் கற்காலத்திலேயேதான் உள்ளது எனலாம். எத்தனையோ நாகரிக வளர்ச்சி அடைந்தும் அவை போலியானவை என்றும் மனதில் வக்கிரங்கள் அவ்வாறேதான் உள்ளன என்றும் அறிகிறோம். இது ஒரு நிலை. மற்றொரு நிலை எதிர்காலச் சூழல். விஞ்ஞான முன்னேற்றங்கள் காரணமாகச் சகல வசதிகளையும் பெற்றுள்ள எதிர்கால உலகிலும் மனித மனம் முழுமையான சந்தோஷத்தை அடையவில்லை என்பதை ஆசிரியர் அழகாக ''ஒன்பதாவது பெண்''ணில் காண்பிக்கிறார். ஆக, இந்த இரு நிலைகளுக்கும் இடைப்பட்ட ஒரு சூழ்நிலையிலேயே வாழ்ந்து, இருப்பதை எல்லோருடனும் பகிர்ந்து கொண்டு வேதனையிலே இன்பத்தையும், குறைவிலே நிறைவையும் காணத் துடிக்கிறது மனித மனம்.

எந்த நிலையில் எங்கு வாழ்ந்தாலும் மனிதனின் அடிப்படை இயல்புகள் சாவதில்லை. யுத்தங்களினாலும், அசுரத்தனமான ஆயுதங்களாலும் ஏற்பட்ட சேதங்களால் மனிதன் பூமிக்கு அடியில் வாழும் அவலத்திலகூட ஒப்புரவுடன் வாழ்ந்து கொண்டு, இருப்பதைப் பகிர்ந்து கொண்டு, இயற்கையை ரசித்துக் கொண்டு வாழ அவனுக்கு இருக்கும் அவா மறையவில்லை. இதனை அழகாக ''சூரிய''னில் காணுகின்றோம்.

மனிதன் தன் அறிவால் தான் படைத்த கம்ப்யூட்டருக்கு எஜமானனாக இருக்காமல், அதனையே சார்ந்து வாழும் அவலமும், அது நாளடைவில் தனக்குத் தானே சக்தியை ஏற்படுத்திக் கொண்டு, அவனை வெல்லும் அவலமும், ''காலமானவ''ரில் அழகாக விளக்கப்பட்டுள்ளன.

''நகர் வலம்'' மனத்தை நெகிழச் செய்கிறது. ஆத்மாவின் எதிர்பார்ப்புக்கள்—அவை நிராசையாகும் விதம் — கண்களில் நீரை வரவழைக்கிறது. மனிதன் எங்கு வேண்டுமானாலும் வாழலாம், எப்படி வேண்டுமானாலும் வாழலாம். ஆனால் அவனுக்குத் தன் மூதாதையர் மீது, தன் மண்ணின்மீது இருக்கும் பற்று மாறுவதில்லை.

நம் எண்ணங்கள், குறிக்கோள்கள் முறையாக இருந்தால் மட்டும் பயனில்லை; அவற்றை

## 4. விஞ்ஞானியின் குற்றமல்ல! அஞ்ஞானியின் தவறு!

அடையும் வழியும் சரியானதாக இருத்தல் வேண்டும்.

விஞ்ஞானம் மக்களுக்கு ஏற்பட்ட வரப்பிரசாதம். அவற்றை ஆக்கத்துக்கு அன்றி, தன்னலத் தீமைக்குப் பயன்படுத்துதல் விஞ்ஞானிகளின் தவறல்ல; அஞ்ஞானியான மனிதனின் தவறு. இக்கருத்துக்களை அழகாக ''வாசல்'' கூறுகின்றது.

மனிதனின் அவசர புத்தியும், பேராசைத் தனமும் அவனை விட்டு என்றும் நீங்குவதில்லை. என்றுமே திருப்தி அடையாது. பேராசையுடன் அலையும் அவன் மனநிலையை அழகாக ''யயாதி''யில் கூறுகிறார் ஆசிரியர். இந்தக் கதையை எழுதியிருக்கும் முறை இயல்பாக உள்ளது.

எல்லாச் சுகங்களையும், வசதிகளையும் அடையப் பாடுபட்டு, அவற்றை அடைந்தபிறகும் மன அமைதி சுலபத்தில் கிடைத்து விடுவதில்லை. அதைக் காட்டிலும் எவ்வளவு துன்பங்கள், துயரங்கள் நடுவிலும் 'இவ்வளவாவது பெற்றோமே, ஆண்டவனுக்கு நன்றி' என்று கூறி மிகச் சுலபமாக மன அமைதியைப் பெற்று விடலாமே! மனிதன் என்னதான் மிகச் சிறந்த சூழ்நிலையில் வாழ்ந்தாலும் இறைவன் இல்லை என்று தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டாலும், சிறு சந்தேகம் எழும்பும்போது மனம் குழம்பி, தன் போலித்தன்மையை உதறி, இறைவன் இருப்பதை அடி மனத்தில் உணருகின்றான். இறைவன் எங்கும் பரவியிருப்பதையும், தன்னுள்ளேயே அவன் இருப்பதையும் உணருகின்றான். காணும் பொருளெங்கும் அவன் வியாபித்திருப்பதை அறிகிறான். ''தேவன் வருகை'' இதை நமக்கு உணர்த்துகிறது.

ஆசிரியர் நூற்றாண்டுகள்தோறும் ஏற்படும் மாற்றங்களை விளக்கித் திகைப்பூட்டுகிறார். சென்ற நூற்றாண்டு மனிதர்களைக் காட்டிலும் நாகரிகம் மிக்கவர்கள் என்று நம்மை நாமே போற்றிக் கொள்ளும்போது அடுத்த நூற்றாண்டினர் நம்மைக் காட்டுமிராண்டிகள் என வர்ணிப்பது சிரிக்க வைக்கும்போதே சிந்தனையைக் கிளறுகிறது.

சமயங்கள், சாதிகள், அவற்றின் பிரிவுகள் என்று அர்த்தமற்று நீண்டு செல்லும் ஈனங்கள் அழிந்த, மூட நம்பிக்கைகள் அற்ற, மனிதனை மனிதன் வெல்லும் அவலங்கள் அற்ற, செல்வர் வறியோரையும், வலியோன் எளியோரையும் வெற்றி கொள்ளும் கொடூரங்கள் அற்ற நிலையைப் பெறுவதே நாகரிகத்தின் உச்ச கட்டம். அப்பொழுதுதான் அனைவரும் உண்மையில் மனிதப் பிறவிகள். அதுவரையில் எவ்வளவுதான் விஞ்ஞான முன்னேற்றங்களால் வசதிகளை வளர்த்துக் கொண்டிருந்தாலும் மனிதன் பகுத்தறிவு என்ற ஒன்றைப் பெற்று விட்டதாகக் கூறப்படும் விலங்குதான். இந்த அடிப்படைக் கருத்து சுஜாதாவின் கதைகள் அனைத்திலும் இழையோடுகிறது.

—சுபத்ரா



# பார்த்திபன் கனவு

## அத்தியாயம் 2
## சந்திப்பு

மாமல்லபுரத்தில் கலைத் திருவிழா வழக்கம்போல் நடந்து கொண்டிருந்தது. இவ்வருஷம் சக்கரவர்த்தி திருவிழாவுக்கு விஜயம் செய்யவில்லை. சில காலமாகச் சக்கரவர்த்தி ஏதோ துக்கத்தில் ஆழ்ந்திருப்பதாகவும், அதனால்தான் கலை விழாவுக்கு வரவில்லை என்றும் ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். வேறு சிலர், சக்கரவர்த்தி கொஞ்சகாலமாகப் பல்லவ நாட்டிலேயே இல்லையென்றும், இவருடைய குமாரன் இலங்கையிலிருந்து திரும்பிய பிறகு அவனிடம் இராஜ்ய பாரத்தை ஒப்புவித்துவிட்டு மாறு வேஷத்துடன் தேசயாத்திரை போயிருக்கிறார் என்றும் சொன்னார்கள்.

ஆனால், சக்கரவர்த்தியின் குமாரன் மகேந்திரனும், குமாரி குந்தவி தேவியும் இவ்வருஷம் கலை விழாவுக்கு விஜயம் செய்திருந்தபடியால் மாமல்லபுர வாசிகள் சிறிதளவும் உற்சாகம் குன்றாமல் விழாவைச் சிறப்பாக நடத்தினார்கள்.

கலைவிழாவின் காட்சிகளையும், கற்பாறைகளில் செதுக்கிய அற்புதமான சித்திரங்களையும் ஆங்காங்கே நடைபெற்றுக் கொண்டிருந்த இசை விருந்து நாட்டியம், கூத்து ஆகியவைகளையும் பார்த்து அனுபவித்துக் கொண்டு, கப்பலிலிருந்து இறங்கிய நமது இரத்தின வியாபாரி குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்தான்.

அவனுடைய முகத்தில் அபூர்வமான கிளர்ச்சி தோன்றியது; கண்களில் அளவிலாத ஆர்வம் காணப்பட்டது. எவ்வளவுதான் பார்த்த பிறகும், கேட்ட பிறகும் கூட அவனுடைய இருதய தாகம் தணிந்ததாகத் தெரியவில்லை. பார்க்கப் பார்க்கக் கேட்கக் கேட்க, அந்தத் தாகம் அடங்காமல் பெருகியது. அந்த அதிசயமான சிற்பக் காட்சிகளையும், உயிருள்ள ஓவியங்களையும் பார்க்கும்போதும், ஊனையும், உள்ளத்தையும் உருக்கும் இசை அமுதத்தைப் பருகும்போதும் அவன் அடைந்த அனுபவம் ஆனந்தமா? அல்லது அருவையா? அல்லது இரண்டும் கலந்த உணர்ச்சியா?

இரத்தின வியாபாரிக்குப் பக்கத்தில் தலையிலும் தோளிலும் மூட்டைகளைச் சுமந்துகொண்டு ஒரு குள்ளன் போய்க் கொண்டிருந்தான். அவனுடன் இரத்தின வியாபாரி ஜாடை காட்டிப் பேசுவதைப் பார்த்தால், குள்ளனுக்குக் காது செவிடு என்று ஊகிக்கலாம். அவன் செவிடு மட்டுமல்ல; ஊமையாகக் கூட இருக்கலாம் என்றும் தோன்றியது. தன்னுடைய நடவடிக்கைகளைப் பற்றி வேறு யாருக்கும் தெரியப்படுத்த முடியாமல் இருக்கும் பொருட்டே, நமது இரத்தின வியாபாரி அத்தகைய ஆளைப் பொறுக்கி எடுத்திருக்க வேண்டும்.

ஆமாம்; அந்த இளம் வர்த்தகனின் நடவடிக்கைகள், கவனித்துப் பார்ப்பவர்களின் உள்ளத்தில் சந்தேகத்தை உண்டு பண்ணுவனவாய்த்தான் இருந்தன. அவன் ஆங்காங்கு சிற்பக் காட்சியோ, சித்திரக் காட்சியோ உள்ள இடத்தில் சிறிது நேரம் நிற்பான். சிற்பங்களையும் பார்ப்பதோடல்லாமல் பக்கத்தில் நிற்கும் சிற்பிகளையும் கவனிப்பான். அவர்களில் யாராவது ஒருவன் தனித்து நிற்க நேர்ந்தால் அவனை நெருங்கி, முதுகைத் தட்டி, ''உன்னிடம் ஒரு விஷயம் பேச வேண்டும்; கொஞ்சம் ஒதுப்புறமாக வருகிறாயா?'' என்று கேட்பான். இரத்தின வியாபாரியின் கம்பீரத் தோற்றத்தையும் களையான முகத்தையும் பார்த்த யாருக்குத்தான் அவன் பேச்சைத் தட்ட மனம் வரும்? அவன் சொற்படியே கொஞ்சம் தனியான இடத்துக்கு அவர்கள் வருவார்கள். அவர்களிடம் அவ்வர்த்தகன், கடல்களுக்கு அப்பால் தான்

அமரர் கல்கி

வசிக்கும் தேசத்தைப் பற்றியும் அந்தத் தேசத்தின் வளத்தையும் செல்வத்தையும் பற்றியும் பிரமாதமாக வர்ணிப்பான். கரிகாலச் சோழச் சக்கரவர்த்தியின் காலத்தில் கடல் கடந்து சென்ற தமிழர்கள்தான் அத்தேசத்தில் வசிக்கிறார்கள் என்றும், அவர்களுக்குத் தாய் நாட்டில் உள்ளவை போன்ற திருக்கோவில்களும் சிற்பங்களும் இல்லையே என்ற ஒரு குறையைத் தவிர வேறு குறையே கிடையாவென்றும் எடுத்துச் சொல்வான்.

''அந்தத் தேசத்துக்கு வருகிறாயா? வந்தால் திரும்பி வரும்போது பெருஞ் செல்வனாகத் திரும்பி வரலாம். அந்த நாட்டில் தரித்திரம் என்பதே கிடையாது. தெருவெல்லாம் இரத்தினக் கற்கள் இரைந்து கிடக்கும்!'' என்று சொல்லி, குள்ளன் தூக்கிக் கொண்டு வந்த பையிலிருந்து ஒரு பிடி இரத்தினக் கற்களை எடுத்து அவர்களிடம் காட்டுவான்.

இரத்தின வியாபாரியின் பேச்சிலேயே அநேகமாக அந்தச் சிற்பி மயங்கிப் போயிருப்பான். கை நிறைய இரத்தினக் கற்களைக் காட்டியதும், அவன் மனத்தை நிச்சயப் படுத்திக் கொண்டு தன்னுடைய சம்மதத்தைத் தெரிவிப்பான். அப்படிச் சம்மதம் தெரிவிக்கும் ஒவ்வொருவரிடமும் பெரிய இரத்தினம் ஒன்றைப் பொறுக்கிக் கொடுத்து ''அடுத்த அமாவாசையன்று புலிக் கொடி போட்ட கப்பல் ஒன்று இந்தத் துறைமுகத்துக்கு வரும். அந்தக் கப்பலுக்கு வந்து இந்த இரத்தினத்தைக் காட்டினால் கப்பலில் ஏற்றிக்கொள்வார்கள்'' என்பான் நமது இளம் வர்த்தகன்.





கலைத் திருவிழா நடந்து மூன்று தினங்களிலும் ரத்தின வியாபாரி மேற் சொன்ன காரியத்திலேயே ஈடுபட்டிருந்தான். மூன்றுவது நாள் விஜயதசமியன்று அவன் வீதியோடு போய்க்கொண்டிருக்கையில் திடீரென்று எதிர்பாராத ஒரு காட்சியைக் கண்டான். (எதிர்பாராததா? அல்லது ஒருவேளை எதிர்பார்த்ததுதானா? நாம் அறியோம்) ஆம்! அவன் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட நங்கை முன்போலவே பல்லக்கில் சென்ற காட்சிதான்.

மூன்று வருஷத்துக்கு முன்பு பார்த்ததற்கு இப்போது அந்தப் பெண்ணின் முகத்தில் சிறிது மாறுதல் தோன்றியது. அன்றைக்கு அவளுடைய முகம் சூரியன் அஸ்தமித்த பிறகு நீலக் கடலில் உதயமாகும் பூரணச் சந்திரனைப் போல் பசும்பொன் காந்தியுடன் பிரகாசித்தது. இன்றோ, அதிகாலை நேரத்தில் மேற்குத் திசையில் அஸ்தமிக்கும் சந்திரனைப் போல் வெளிறிய பொன்னிறமாயிருந்தது. அப்போது முகத்தில் குடிகொண்டிருந்த குதூகலத்துக்குப் பதிலாக இப்போது சோர்வு காணப்பட்டது. விஷமம் நிறைந்திருந்த கண்களில் இப்போது துயரம் தோன்றியது. இந்த மாறுதல்களினாலே அந்த முகத்தின் சௌந்தரியம் மட்டும் அணுவளவும் குன்றவில்லை; அதிகமாகியிருந்ததென்றும் சொல்லலாம்.

வீதியோடு போய்க் கொண்டிருந்த இரத்தின வியாபாரி தனக்குப் பின்னால் கூட்டத்தில் ஏதோ கலகலப்புச் சத்தம் உண்டாவதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். காவலர் புடைசூழ ஒரு சிவிகை வருவதைக் கண்டான்.



**ஒரு சொல்லுக்கு ஒரு டாலர்!**

புகழ் பெற்ற நாவல் ஆசிரியரும் கவிஞருமான ருட்யார்டு கிப்ளிங் தமது படைப்புக்களை வெளியீட்டாளரிடமிருந்து, ''ஒரு சொல்லுக்கு ஒரு டாலர்'' என்று கணக்கிட்டுப் பணம் வாங்கிவிடுவார். இதனை அறிந்த ஓர் அமெரிக்கர்--

''ஐயா, இலக்கியத்தை ஒரு சொல்லுக்கு ஒரு டாலர் என்ற விலையில் தாங்கள் விற்பனை செய்வதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு டாலர் அனுப்பியுள்ளேன் 'மாதிரி' அனுப்பவும்'' என்று மடல் எழுதினார்.

''நன்றி'' என்று ஒரே சொல்லில் பதில் எழுதினார் கிப்ளிங். சில நாள் கழித்து அந்த அமெரிக்கர் இந்தச் சுவையான வியாபாரச் செய்தியை ஓர் ஏட்டுக்கு அனுப்பி வைத்தார். அந்த ஏடு அதனை வெளியிட்டு அன்பளிப்பாக இரண்டு டாலர் அனுப்பி வைத்தது. உடனே அவர், ''இதனால் எனக்கு லாபம் ஒரு டாலர். அதில் பாதி உங்களுக்குச் சேர வேண்டியது. அதனால் செலவு போக நாற்பத்தைந்து சென்ட் அனுப்பியுள்ளேன்'' என்று கிப்ளிங்குக்கு மடல் எழுதினார்.

-கோ. நீபா

---

அச்சிவிகையில் இருந்த பெண் தன் இருதய மாளிகையில் குடிகொண்டிருந்தவள்தான் என்பதை ஒரு நொடியில் தெரிந்து கொண்டான். அச்சமயத்தில் அவன் நெஞ்சு விம்மிற்று; கண்களில் நீர் ததும்பிற்று. இம்மாதிரி சந்தர்ப்பம் நேருங்கால் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி அவன் யோசித்து வைத்திருந்ததெல்லாம் சமயத்துக்கு உதவ வில்லை. வீதி ஓரமாக ஒதுங்கி நின்று கொண்டான். பல்லக்கின் பக்கம் பார்க்காமல் வேறு திசையை நோக்கினான்.

அவன் இருந்த இடத்தைச் சிவிகை தாண்டியபோது தன்னை இரண்டு விசாலமான கரிய கண்கள் கூர்ந்து நோக்குவதுபோல் அவனுக்கு உணர்ச்சி உண்டாயிற்று. திரும்பிப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அளவு மீறிப் பொங்கிற்று. பல்லைக் கடித்துக் கொண்டு அவன் வேறு திசையையே பார்த்துக் கொண்டிருந்தான். பல்லக்கு கொஞ்ச தூரம் முன்னால் போன பிறகு தான் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். பல்லக்கில் உட்கார்ந்திருந்த பெண் தன்மீது வைத்த கண்ணை எடுக்காமல் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அடுத்த கணம் அவனுடைய கண்கள் மறுபடியும் கீழே நோக்கின.

ஆனால் பல்லக்கு மேலே போகவில்லை. நின்று விட்டது. பல்லக்குடன் போய்க் கொண்டிருந்த வீரர்களில் ஒருவன் இரத்தின வியாபாரியை நோக்கி வந்தான். அருகில் வந்ததும், ''அப்பா! தேவிக்கு உன்னிடம் ஏதோ கேட்க வேண்டுமாம்; கொஞ்சம் வந்துவிட்டுப் போ'' என்றான்.

இரத்தின வியாபாரி அவனுடன் பல்லக்கை நோக்கிப் போனான். அந்தச் சில விநாடி நேரத்துக்குள் அவனுடைய உள்ளத்தில் என்னவெல்லாமோ எண்ணங்கள் கொந்தளித்தன. இந்தப் பெண் யாராக இருக்கும்? எதற்காக நம்மை அழைக்கிறாள்? நம்மை அடையாளம் கண்டுகொண்டாளோ? அப்படியானால் இத்தனை நாளும் நம்மை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்ததாக ஏற்படுகிறதே? இவள் உயர் குலத்துப் பெண் என்பதில் சந்தேகமில்லை. ஒருவேளை சக்கரவர்த்தியின் மகளாகவே இருக்குமோ? ஐயோ! அவ்விதம் இருந்து விட்டால்...!

இரத்தின வியாபாரி பல்லக்கை நெருங்கி வந்து அந்தப் பெண்ணின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அப்பப்பா! அவளுடைய பார்வைதான் எவ்வளவு கூரியது! பெண்களின் கண்களை வாளுக்கும் வேலுக்கும் இதனால் தான் ஒப்பிடுகிறார்கள் போலும்!

ஆமாம்; குந்தவி அவனுடைய கண்களின் வழியாக அவனுடைய இருதயத்தையே ஊடுருவி அதன் இரகசியத்தைக் கண்டுபிடிக்க விரும்புகிறவளைப் போலத்தான் பார்த்தாள். இவ்விதம் சற்று நேரம் மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, ''ஐயா! நீர் யார்? இந்தத் தேசத்து மனுஷர் இல்லை போலிருக்கிறதே?'' என்றாள்.

''ஆம் தேவி! நான் கடலுக்கப்பால் உள்ள செண்பகத் தீவில் வசிப்பவன். இரத்தின வியாபாரம் செய்வதற்காக இவ்விடம் வந்தேன். என் பெயர் தேவசேனன்'' என்று மளமளவென்று பாடம் ஒப்புவிக்கிறவனைப் போல் மறுமொழி கூறினான் இரத்தின வியாபாரி.

அவனுடைய படபடப்பு குந்தவி தேவிக்கு வியப்பை அளித்திருக்கவேண்டும். மறுபடியும் சிறிது நேரம் மௌனமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு ''எந்தத் தீவு என்று சொன்னீர்?'' என்றாள்.

''செண்பகத் தீவு.''

''செண்பகத் தீவு—கேட்ட ஞாபகமாயிருக்கிறதே! அந்தத் தீவை ஆளும் அரசன் யாரோ?''

''செண்பகத் தீவின் பூர்வீக அரசவம்சம் நசித்துப் போயிற்று. சோழநாட்டு இளவரசர் விக்கிரமர்தான் இப்போது எங்கள் அரசர்.''

இவ்விதம் சொன்னபோது குந்தவியின் முகத்தில் உண்டான பிரகாசத்தை இரத்தின வியாபாரி கவனிக்காமல் போகவில்லை. அந்தத் தேசப் பிரஷ்டனை இன்னும் இவள் நினைவு வைத்துக் கொண்டுதான் இருக்கிறாள்! ஆனால் இவள் யார்? இவ்வளவு முக காந்தியும் சௌந்தரியமும் உள்ளவள் ஒருவேளை....? அத்தகைய சந்தேகமே இரத்தின வியாபாரிக்குத் திகில் உண்டாக்கிற்று.

அப்போது குந்தவி, "நீர் இரத்தின வியாபாரி என்பதாகச் சொன்னீரல்லவா?" என்று கேட்டாள்.

"ஆம், அம்மா! இதோ இந்தக் குள்ளன் தலையில் உள்ள மூட்டைகளில் மேன்மையான இரத்தினங்கள் இருக்கின்றன. வேணுமானால் இப்போது எடுத்துக் காட்டுகிறேன்."

"இப்போது வேண்டாம், வீதியில் கூட்டம் சேர்ந்து போகும். சாயங்காலம் அரண்மனைக்கு வாரும்" என்றாள் குந்தவி.

'அரண்மனை!....' இந்த வார்த்தையைக் கேட்டதும் அந்த இளம் வர்த்தகனுடைய முகமானது அப்படி ஏன் சிணுங்குகிறது?

அந்தச் சிணுக்கத்தைக் குந்தவி கவனித்தாளோ, என்னவோ தெரியாது. எதையோ மறந்து போய் நினைத்துக் கொண்டவள் போல் "ஆமாம்; சாயங்காலம் கட்டாயம் அரண்மனைக்கு வாரும். சக்கரவர்த்தியின் குமாரி குந்தவி தேவிக்கு இரத்தினம் என்றால் ரொம்பவும் ஆசை. கட்டாயம் உம்மிடம் வாங்கிக் கொள்வாள். ஒருவேளை இந்த மூட்டையிலுள்ள இரத்தினங்கள் அவ்வளவையும் வாங்கிக்கொண்டாலும் வாங்கிக் கொள்ளலாம்" என்றாள்.

இரத்தின வியாபாரி பெருமூச்சு விட்டான். மனத்திலிருந்த பெரிய பாரம் ஏதோ ஒன்று நீங்கியவன்போலத் தோன்றினான்.

"அப்படி எல்லாவற்றையும் ஒரே இடத்தில் விற்றுவிட வேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை. இந்தத் தேசத்தில் இன்னும் பல இடங்களையும் சுற்றிப் பார்க்க விரும்புகிறேன். உங்களுக்கு வேண்டிய இரத்தினங்களை நீங்கள் வாங்கிக் கொண்டால் போதும்" என்றான்.

"அதற்கும் நீர் அரண்மனைக்குத் தான் வந்தாக வேண்டும். கட்டாயம் வருகிறீரா?"

"வருகிறேன்; ஆனால் அரண்மனைக்குள் வந்து யார் என்று கேட்கட்டும்?"



"நாம் கட்டி முடித்த எட்டடுக்கு மாளிகையில் அனுமதி பெறாமல் கட்டிய மாடிகளை இடிக்கப் போறாங்களாம்!"
"அடடா! எந்தெந்த மாடிகளை இடிக்கணும்?"
"முதலாவது மாடியையும்; மூன்றாவது மாடியையும்."

"குந்தவி தேவியின் தோழி மாதவி என்று கேட்டால் என்னிடம் அழைத்து வருவார்கள்."

"தடை ஒன்றும் இராதே!"

"ஒரு தடையும் இராது. இருக்கட்டும்; இப்படி நீர் இரத்தின மூட்டைகளைப் பகிரங்கமாக எடுத்துக் கொண்டு சுற்றுகிறீரே! திருடர் பயம் இல்லையா உமக்கு?"

"நன்றாகக் கேட்டீர்கள்! நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் ஆட்சியில் திருட்டுப் பயமும் உண்டா?" என்றான் இரத்தின வியாபாரி.

குந்தவி புன்னகையுடன், "அப்படியா? எங்கள் சக்கரவர்த்தியின் புகழ் அப்படிக் கடல் கடந்த தேசங்களிலெல்லாம் பரவியிருக்கிறதா? சந்தோஷம்! நீர் சாயங்காலம் அவசியம் அரண்மனைக்கு வருகிறீர் அல்லவா?" என்று கேட்டாள்.

"கட்டாயம் வருகிறேன்" என்றான் வியாபாரி.

பிறகு, குந்தவியின் கட்டளையின் பேரில் பல்லக்கு மேலே சென்றது. இரத்தின வியாபாரி நின்ற இடத்திலேயே நின்று பல்லக்கு ஜனக் கூட்டத்தில் மறையும் வரையில் அந்தத் திசையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன அப்பா! எத்தனை நேரம் ஒரே பக்கம் பார்ப்பாய்? கண் விழி பிதுங்கப் போகிறது" என்று ஒரு கடூரமான குரலைக் கேட்டு அந்த இளம் வர்த்தகன் திடீரென்று காலால் நெருப்பை மிதித்தவன் போல் துள்ளித் திரும்பிப் பார்த்தான். ஒரு கரு நிறக் குதிரை மேல் சாட்சாத் மாரப்ப பூபதி அமர்ந்து தன்னை ஏளனப் பார்வையுடன் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான். (தொடரும்)

## மர்மச் சிறுகதை-2.

# முதல் வழக்கு



எஸ். துரைக்கிருட்டிணன்

இடியும் மின்னலுமாய் அட்டகாசம் செய்து கொண்டிருந்தது மழை.

சன்னல் கம்பிகளின் இடையே புகுந்து உள்ளே நீர்த் திவலைகளாய் வந்து விழுந்த மழைத்துளிகளையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார் சந்திரன்.

காலையில் கமிஷனர் கூறிய வார்த்தைகள் மலையிடை எதிரொலிக்கும் வார்த்தைகளை அவர் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டிருந்தன.

''சந்திரன் நீங்க சப்-இன்ஸ்பெக்டரானதிலிருந்து இதுவரை ஒரு 'மர்டர் கேஸ்' கூட 'சால்வ்' பண்ணினதில்லே. அப்படியிருக்கையிலே 'பிரமோஷன்' கேக்கறதிலே நியாயமே கிடையாதே?''

''கிர்ரிங்...கிர்...ரிங்''

ரிஸீவரை எடுத்த சந்திரன் ''ஹலோ! சப்-இன்ஸ்பெக்டர் பேசறேன், யாரது?'' என்று கேட்டார்.

''இங்கே ஹபிபுல்லா ரோட்டிலுள்ள வசந்த விலாசில் ஒரு கொலை நடந்திருக்கிறது.''

''இறந்தவர் யார்?''

''வீட்டுச் சொந்தக்காரர் தயாள்!''

''நீங்க பேசறது யாரு?''

இந்தக் கேள்விக்கு 'டொக்'கென்ற சத்தம் தான் பதிலாகக் கிடைத்தது.

'சந்திரன் – உனக்கொரு சான்ஸ். விஷ் யூ பெஸ்ட் ஆப் லக்!' என்று தம்மைத் தாமே தட்டிக் கொடுத்துக் கொண்டு தம் சகாக்களோடு ஜீப்பில் ஏறினார் சப் இன்ஸ்பெக்டர் சந்திரன்.

'வசந்த விலாஸ்' முன் ஜீப் நின்றபொழுது மழை நின்று விட்டிருந்தது. என்றாலும் இலைகளில் நின்றிருந்த நீர் 'சரசர'வென்று விழுந்து கொண்டிருந்தது. ஜீப்பை விட்டிறங்கிய சந்திரன் கேட்டைத் தாண்டி உள்ளே சென்றபொழுது காலில் ஏதோ தட்டுப்பட்டது. இருளில் சரியாக ஒன்றும் தெரியவில்லை.

''கந்தசாமி, டார்ச் அடி!'' கட்டளை ஒளிமயமாகப் பாய்ந்தது.

''நாய்......!''

இரத்த வெள்ளத்தில் நாயொன்று கிடந்தது. இரத்தம் மழை நீருடன் கலந்து கால் பட்ட இடத்தை யெல்லாம் கறைப்படுத்திக் கொண்டிருந்தது.

நான்கு பேரை வீட்டைச் சுற்றி நிற்கும்படி பணித்து விட்டு உள்ளே நடந்தார் சந்திரன். வராந்தாவில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

ஊசி போட்டால் கூட 'டங்'கென்று கேட்கும் அளவுக்கு அமைதி நிலவியது.

'ரீடிங் ரூம்' என்று போடப்பட்டிருந்த அறை பரக்கத் திறந்து கிடந்தது.

சந்திரனின் கண்கள் அங்குமிங்கும் பறந்தன.

அறையின் நுழைவாயிலில் ஒரு துப்பாக்கி கிடந்தது. அதை அடுத்துச் சில இரத்தக் கறைகள்! உடன் வந்திருந்த புகைப்பட நிபுணர் அனைத்தையும் தன் ஃபிளாஷ் கேமிராவுக்குள் அடக்கம் செய்து கொண்டார்.

''சார்! இதோ பாருங்க ஒரு கர்சீப்!'' கான்ஸ்டபிள் ஒருவர் கொடுத்தார். அதை வாங்கிப் பத்திரப்படுத்திக் கொண்டார்.

அருகில் இருந்த மேஜையின் மேல் ''தி கோல்டன் கீ'' என்ற புத்தகம் திறந்து கிடந்தது.

இரத்தக் கறைகளின் அருகே ஒரு தங்கப் பொத்தான் கிடந்தது. அதில் 'தி' என்ற எழுத்து பொறிக்கப்பட்டிருந்தது.

''சார், கொலைன்னு ஃபோன் வந்ததே! 'பாடி' எங்கே?''

''என்னைக் கேட்டால்? மர்டரரைத் தான் கேட்கணும்!'' என்றவர் வீடு முழுதும் சோதனையிடுமாறு இரண்டு பேரை அனுப்பினார்.

''சார்! ஒரு தடயமும் சிக்கலே சார்'' என்று கான்ஸ்டபிள்களும், ''ஒரு கைரேகையும் கிடைக்கவில்லே, ஸார்!'' என்று கைரேகை நிபுணரும் சொல்லி வைத்தாற்போல் கூறியது சந்திரனுக்கு எரிச்சலையூட்டியது.

''என்ன, சந்திரன்! உங்களோட முதல் கொலைக் கேஸே பெரிய தலைவலியா இருக்கும் போலிருக்கே!'' சிரித்துக் கொண்டே பேசிய கமிஷனரையும், தம் கையிலிருந்த பைலையும் மாறி மாறிப் பார்த்த சந்திரன் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

''எஸ், சார்! 'பாடி' இல்லாம போனது தான் இதுலே பெரிய 'டிபிகல்டி.' ஆனா, கிடைச்சிருக்கிற கைக்குட்டையிலேயும், 'கோல்டன் பட்டன்'லேயும் இருக்கிற 'இனிஷியல்'லைப் பார்க்கிற போது இறந்தவர் தயாள் ஆக இருக்கலாமோன்னு தோணுது!''

''இது தற்கொலையா? கொலையா?''

''டெலிபோன் காலே மட்டும் வைச்சுக்கிட்டு இதைக் கொலேன்னு சொல்ல முடியாது சார்! ஆனா துப்பாக்கியிலேயும் சரி! வீட்டிலிருந்து கிடைத்த பொருள்களிலேயும் சரி, எந்தக் கைரேகையும் இல்லே. தற்கொலேக்குத் தன்னே இரையாக்கணும்னு விரும்பற ஒருத்தர் கைக்கு உறை போட்டுக்கிட்டுத்தான் சுட்டுக்கணும்கிறது கிடையாதே!''

''உம்....ப்ரோஸீட்!''

''அதுவுமில்லாமே, தற்கொலே பண்ணிக்கிறவர் வீட்டுக் கேட்லே இருக்கிற நாயைக் கொன்னுட்டுத்தான் செஞ்சிக்கணும்கிறதும் கிடையாது! துப்பாக்கிக் குண்டுகள் இரண்டு செலவாயிருக்கு அந்தத் துப்பாக்கியிலே! ஒன்னு அந்த நாயோட உடலிலேயிருந்து எடுத்திருக்கும் குண்டு... மற்றொன்று!......

''தயாளைக் கூட உபயோகித்த குண்டு. அப்படித்தானே?''

''ஆமாம், சார்! அதனுலே...இது கண்டிப்பாத் திட்டமிட்டு செய்யப்பட்ட கொலே தான்னு நான் சொல்றேன்!''

சந்திரன் இப்படிக் கூறிக் கொண்டிருந்த பொழுது, கான்ஸ்டபிள் ஒருவர் ஒரு பார்ஸலேக் கொண்டு வந்து வைத்தார்.

''என்ன பார்சல்?'' என்று கேட்டார் கமிஷனர்.

''தெரியலே சார், உங்க பேருக்குத்தான் வந்திருக்கு!''

கமிஷனர் பார்சலேப் பிரித்தார். அதிலிருந்த பொருளேக் கண்டதும், கமிஷனரது உடலும், சந்திரனின் உடலும் அப்பொழுது தான் மழையில் நனேந்தாற்போல் வியர்வையால் நனேந்தன.

உள்ளே இருந்தவை......

வெட்டுண்ட இரண்டு கைகள்....!

கோடை காலத்தில் மாலேவேளே தரும் இன்பத்தைச் சொல்லவா வேண்டும்? தம் வீட்டு வெளிப்புறத்தில் சாய்வுநாற்காலியில் அமர்ந்து மிட்டாய் சுற்றும் பச்சைக் காகிதத்தால் பொம்மை செய்து குழந்தை ராஜியிடம் கொடுத்து விளேயாடிக் கொண்டிருந்தார் சந்திரன். என்றாலும் அவர் வேறு யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறுர் என்பதை



அவரது கண்கள் கூறுமல் கூறிக் கொண்டிருந் தன.

''கிணிங்....கிணிங்''

முகத்தை மறைக்கும் பரட்டைத் தலையும், பெல்பாட்டமும் பூப்போட்ட சட்டையுமாகச் சைக்கிளிலிருந்து இறங்கிய உருவத்தைக் கண்டதும் அவர் கண்கள் மலர்ந்தன.

''வாடா பாலு! ஏதாவது விஷயம்கிடைத் ததா?'' என்று ஆர்வத்துடன் கேட்ட அண்ணனைக் குறும்பாகப் பார்த்தவாறே குழந்தை ராஜியிடம் காப்பி கொண்டு வரப் பணித் தான் தம்பி. பிறகு தன் சட்டைப் பட்டன்களையும், காலரையும் தளர்த்தி விட்டுக் கொண்டு ''அண்ணு, இந்தத் தயாள் இருக்காரே....'' என்று மிதப்பாகத் தொடங்கினுன்.

''எங்கே இருக்கிருர்? அவர்தான் போய் விட்டாரே!''

''அவர் பெரிய ஆள்....! சுற்றுப்புறத்திலே இருக்கிறவங்க யாரும் அவரை இதுவரை பார்த்ததில்லையாம். அவர் இரவிலே தான் அதிகமாக வருவாராம். பகலிலே வந்தால் மூடிய காரில் தான் வருவாராம். அந்த அளவுக்கு மர்மமா இருந்திருக்கார் மனுஷன்...!''

''தனியாவா பங்களாவிலே இருக்காராம்?''

''ரொம்ப வருஷங்களுக்கு முன்னுடி அவர் சொந்த ஊரான அழகாபுரியிலேயிருந்து வந்த போது செல்லையாங்கிற வேலைக்காரனைக் கூடவே துணைக்கு அழைச்சிக்கிட்டு வந்தாராம். அவனும் மூனு மாசத்துக்கு முன்னுடி இவரை விட்டு விட்டுப் போய் விட்டானும், இவரோட நடவடிக்கைகள் கொஞ்சங்கூடப் பிடிக்காததனுலே....''

''இரு, இரு. நடவடிக்கைகள்னு என்ன?''

''மிஸ்டர் தயாளுக்கும் கள்ளக் கடத்தல் காரர்களுக்கும் தொடர்பு உண்டாம். இதை எத்தனையோ தடவை செல்லையா தடுத்திருக் கானும். கடைசியிலே ஊரை விட்டே போய் விட்டானும். ஆனு அந்த வீட்டுக்கு அடிக்கடி வரும் நபரைப் பத்தி ஒரு தகவல் கிடைச் சிருக்கு....''

''யார்ரா அது?'' கண்கள் அகல விரிந்தன.

''அண்ணு, நீ பெரிய ஆள் அண்ணு! இன்னிக்கு உங்க ஸ்டேஷனுக்கு வந்த பார்சலைப் பத்தி ஒண்ணுமே சொல்லாமல் இருக் கிருயே....! நான் மட்டும் 'டேப்ரிகார்டர்' மாதிரி எல்லாத்தையும் ஒப்பிக்கணும்னு என்ன தலை எழுத்து?'' என்றுன் பாலு.

சந்திரனின் முகத்தில் அசடு வழிந்தது.

''சொல்றேண்டா பாலு....'' என்று ஆரம்பித்தவர், ''அந்தப் பார்சலிலே இருந்த இரண்டு கரங்களும் நல்ல உழைப்பாளி ஒருவரின் கை போல இருந்தன. ஒரு கையில் 'அழகாபுரி'ன்னு பச்சைக் குத்தியிருந்தது. கூடவே ஒரு லெட்டர்....'' என்றுர்.

''அது என்ன! மிரட்டல் கடிதமா?''

''நோ. நோ. ஒரு சமூகத் தொண்டனின் கடிதம். 'இந்தத் தயாளைப்போல் சமுதாயத் துக்குக் கேடு விளைவிக்கிறவங்களை விட்டு வைக்கக் கூடாது. அரசாங்கம் செய்ய வேண்டிய வேலையை நான் செய்திருக்கிறேன்'ன்னு சொல்லி ஒரு 'உண்மை விளம்பி' அனுப்பி யிருக்கான்!''

''.......?.......''

பாலு நெளித்துக்கொண்டே எழுந்தான். ''தூக்கம் கண்ணைச் சுத்தறது அண்ணு!'' என்ற வாறு மாடியை நோக்கி நடந்தவனைப் பின் தொடர்ந்தே ஓடினுர் சந்திரன்.

''டே....டே....யார்ரா அது அந்த வீட்டுக்கு அடிக்கடி வரும் நபர்....?''

''அண்ணு ... மயக்கம் போட்டு விழுந் திடாதீங்க!'' என்று முன்னெச்சரிக்கை கொடுத்தவன் அடுத்த விஞடி 'டக்'கென்று சொன்னுன்?

''தயாள் வீட்டுக்கு அடிக்கடி வர்றது மட்டுமில்லே; கொலை நடந்த அன்னிக்கு இரவு அந்த வீட்டுலேருந்து வந்தவரும் அவரே தான்....!''

''யாரடா அது? சொல்லித் தொலை!''

''உங்க கமிஷனர் கமலநாதன் தான் அந்த ஆள்....!''

''பாலு .... நீ என்ன சொல்றே? அதற்கு ஆதாரம்?''

''என் கண்கள்...அதற்கு மேலே ஒண்ணும் கேட்காதே....!'' என்றவன் மாடிப்படிகளில் ஏறித் தன் அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு விட்டான்.

''**பா**ரு சித்தப்பா.... ராஜி மித்தாய் திங்கிறு! கேத்தாத் தர மாட்டேங்கறு!''

''ஏன், ராஜி! தம்பிக்கும் கொடுத்து நீயும் மிட்டாய் தின்னக் கூடாது?'' பாலு இருவரையும் சமாதானப்படுத்த முயன்றுன்.

''இல்லே சித்தப்பா....''

''என்ன இல்லே?...''

''மிட்டாயே எங்கிட்டே இல்லே, சித்தப்பா. சும்மா இருக்கிற மாதிரி காமிச்சு வாயிலே போடற மாதிரி போட்டுப் 'பாவ்லா' காட்டினேன்!''




இதில் சரியான எழுத்தைக் கண்டுபிடித்து ஒன்று விட்ட ஒரு கட்டமாகப் படித்துக் கொண்டே போனால் இங்கிலாந்து கிரிக்கெட் கட் சியின் நான்கு பௌலர்கள் பெய ரைச் சொல்லி விடலாம்.

விடை அடுத்த பக்கம்.

ராஜி சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் பாலுவுக்குப் பொறி தட்டினாற் போலிருந்தது. உடனே அண்ணனைத் தேடிப் புறப்பட்டு விட்டான்.

கமிஷனரின் கம்பீரத்துக்கு ஈடுகொடுத்து நின்ற பங்களாவின் தோட்டத்தில் கமலநாதன் உலாவிக் கொண்டிருந்தார். இடுமென்று ஜீப்பில் வந்திறங்கிய சந்திரனையும், பாலுவையும் ஆச்சரியத்துடன் பார்த்தவர், "என்ன விஷயம், சந்தர்?" என்று கேட்டார்.

"சார்!" என்று தயங்கிய சந்திரனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, "சார்... நீதியைக் காக்க வேண்டிய நீங்களே இந்த மாதிரிக் காரியத்தைச் செய்யலாமா?" என்றான் பாலு.

"....?...."

கமிஷனர் பேசவில்லை.

"சார்! சனிக்கிழமை இரவு ஹபிபுல்லா ரோட்டில் கொலை நடந்த போது நீங்க எங்கேயிருந்தீங்கன்னு சொல்ல முடியுமா?"

தொண்டையைக் கனைத்துக் கொண்ட கமிஷனர் பேசத் தொடங்கினார்:

"சந்திரன், நான் சாம்ராஜனைப் போல ஒரு தம்பியைப் பெற்றதற்கு வருந்துகிறேன். சில நாட்களாக என் தம்பியின் நடவடிக்கைகளெல்லாம் விநோதமாயிருக்கவே, அவனை நான் சந்தேகிக்க ஆரம்பித்தேன். கொலை நடந்த செய்தியைக் கேட்டதும் தம்பியென்கிற பாசம் அரிக்கவே நான் ஹபிபுல்லா ரோடுக்குப் போனேன். அங்கே.....!"

"அங்கே ... என்ன சார் ... இறந்தவன் கிடந்தானா?" ஆவலோடு கேட்டார் சந்திரன்.

"இல்லை, சந்திரன். நீங்க போனப்ப இருந்த தடயங்கள் தான் அங்கு இருந்தன!"

"அப்பொழுது....?"

"நான் திரும்பி 'வர்றப்ப என் காரில் இடிபட்டு ஓரத்தில் போய் விழுந்தான் ஒரு ஆள்! நான் காரை எடுத்துக் கொண்டு பறந்து விட்டேன்!"

"உங்கள் காரில் இடிபட்டவன் நான் தான்" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் பாலு.

"அதனாலே நீங்க உங்க கடமையைச் செய்யலாம் சந்திரன். தயாளைக் கொன்னது என் தம்பிதான். அவன் அனுப்பிய கைகளுடன் இருந்த கடிதத்தின் கையெழுத்தும் அவனுடையதுதான்!" என்றார் கமிஷனர்.

"ஸார் ! இங்கேதான் தப்புப் பண்றீங்க ! தயாளை உங்க தம்பி கொலை பண்ணினாத் தானே உங்க தம்பியைக் கைது பண்ணனும்?"

"அப்படின்னா தயாள் உயிரோட இருக்காரா என்ன ?"

"அப்படி ஒரு ஆள் இருந்தாத்தானே செத்துப் போக முடியும்?"

"நீ என்னப்பா சொல்றே?" என்றார் கமிஷனர் வியப்புடன்.

"சார்! உங்க தம்பி சாமர்த்தியசாலி! அவர்தான் தயாள் என்ற பெயரில் ஹபிபுல்லா ரோடில் வாழ்ந்து வந்தார்; கடத்தல் வேலைகளையெல்லாம் 'தயாள்' என்ற பெயரில் நடத்தி வந்தார். இப்போது நெருக்கடி நிலைமையை அடுத்து கடத்தல் காரர்களையெல்லாம் பிடிக்க ஆரம்பிச்சவுடனே, தயாள் என்ற பெயரில் இருக்கிற தன்னையும் பிடித்து




விடை:

OLD SNOW
LEVER ARNOLD

விடுவார்களோ என்ற பயம் பிடித்துக்கொண்டது. தயாளைக் கொலை செய்து விட்டால் அவரைக் கைது செய்ய வாய்ப்பில்லாமல் போய் விடுமல்லவா? அதனால்...."

"அதனால் .... கொலை நடந்ததாக ஒரு சில தடயங்களை வைத்து டெலிபோனும் செய்தான் என்கிறாயா? அப்படியானால் அந்தக் கைகள்....? அதிலிருந்த 'அழகாபுரி' என்ற பச்சை? இதெல்லாம்....?"

"நான் இரண்டு நாட்கள் அழகாபுரிக்குச் சென்று இருந்த போது பல தகவல்களைச் சேகரித்தேன். அதிலிருந்து செல்லையா என்ற வேலையாள் செத்து விட்ட தகவலையும், அவனை சாம்ராஜ் தம் பொறுப்பில் அடக்கம் செய்து விடுவதாகக் கூறி, அவன் உடலைப் பெற்று வந்த தகவலையும் அறிந்தேன். ஆரம்பத்திலேயே 'தயாள்' அழகாபுரிக்காரர் என்ற செய்தியைப் பரப்பி விட்டதால் நாம் இறந்தது 'தயாள்' என்றே நம்பி விட்டோம்...!"

"அப்படின்னா ... அந்த இரண்டு கையும் செல்லையாவோடதுங்கிறியா?"

"ஆமாம். அதைத்தான் நமக்கு அனுப்பி விட்டார் சாம்ராஜ்!"

"அதெல்லாம் சரிதான் பாலு. இதையெல்லாம் எப்படிக் கண்டு பிடிச்சே!" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் சந்திரன்.

"அது ஒரு மிட்டாய்க் கதையண்ணா...." என்று இழுத்தான் பாலு.

"அதென்னடா மிட்டாய்க் கதை?"

"இல்லாததை இருக்கிற மாதிரி 'பாவ்லா' பண்றது" என்றவன் ராஜி, மோகன் சண்டையை விவரித்தான்.

"அப்படின்னா எனக்குப் பிரமோஷன் சார்...." என்று இழுத்தார் சந்திரன்.

"இது மர்டர் கேஸ் இல்லையே. அதனாலே உனக்குப் பிரமோஷன் கிடைக்கிறது சந்தேகம். ஆனால் உண்மையைக் கண்டுபிடித்த பாலுவுக்குக் கண்டிப்பா ஒரு வேலை கிடைத்தாகணும். எத்தனை நாள்தான் அவன் வேலையில்லாமல் இருப்பான்? அவனுக்கு இதே 'டிபார்ட்மெண்'டிலே வேலை கிடைக்க நான் 'ரெகமண்ட்' பண்றேன்..." என்றார் கமிஷனர்.

சந்திரன் 'டபுள் பிரமோஷன்' கிடைத்தாற்போலத் தம் தம்பியைப் பெருமிதத்துடன் பார்த்தார்.

# மதுர நாயகி

ம.வெ.ஆர்





பண்டை காலத்தில் எட்டு வகைக் கோயில்கள் இருந்தன.

1. பெருங் கோயில் - குன்றுகள் மேல் கட்டப்பட்டவை.

2. மாடக் கோயில் - யானைகள் ஏறு வண்ணம் பூமி மட்டத்துக்கு மேல் மிகவும் உயரமாகப் படிக்கட்டுகள் அமைத்துக் கட்டப்பட்டவை.

3. கரக் கோயில்- தேர் வடிவக் கோயில்

4. ஞாழற்கோயில் - ஞாழல் மரத் நிழலான கோயில்கள்.

5. கொகுடிக் கோயில்- கொகுடி எனும் ஒரு வகை முல்லைக் கொடியினால் சூழப்பட்ட கோயில்.

6. இளங்கோயில் - ஆலயங்கள் புதுப்பிக்கப் படுகையில் வழிபாட்டுக்காக அருகே அமைத்துக் கொள்ளப்படும் கோயில்.

7. மணிக் கோயில்- மணி போன்ற விமானமுடைய கோயில்.

8. ஆலக்கோயில் — ஆல மர நிழலில் எழுந்தருளியுள்ள இறைவன் கோயில்.

—**ஆதாரம்: அப்பர் தேவாரம்**

## 5

**லா**வண்யாவின் மனம் அலுத்துக்கொண்டது. இந்த ஆறேழு மாதப் பழக்கத்தில் அவன் அலுத்துக் கொள்ளும்படியாக காலவே பொழுதைக் கழித்ததில்லை. இன்று அவன் பற்பல சுவாரசியமான உலக விஷயங்களை விட்டு விட்டு இந்து மதம், ஆலமரம், ஆத்ம சொரூபம் என்று கதைத்து விட்டான். அவன் அவளை அமெரிக்காவுக்கு அழைத்தது அவளுக்கு ஆச்சரியத்தை அளிக்கவில்லை.. மாறாக வேடிக்கையாக இருந்தது. அதே சமயம் அவனை இவ்வளவு தூரம் பேச வைத்தது அவனுடைய கலங்கிய மனம் மட்டும் அல்ல என்று நினைத்தாள். அவள் தேவைக்கு அதிகமாகவே அவனுடன் இத்தனை நாட்கள் பழகி விட்டாள். வெறும் பரிச்சயத்துடன் ஆரம்பித்தது எவ்வளவு விபரீதமாகப் போய்க் கொண்டிருக்கிறது?

அவளுடைய தொழில் வெளியே பார்க்கிறவர்களுக்கு ஒரு சுகமான, சொகுசான பொழுதுபோக்காகத்தான் தெரிகிறது. அவள் வாங்கும் இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்கள்தாம் அவர்களுடைய இரு கண்களுக்கும் ஒரு பொருட்டாகத் தெரிகிறது. ஆனால் அவள் உள்ளூற மனம் புழுங்கும் நாட்கள் எத்தனை? வெளியே விக்கி விக்கி அழ முடியாமல் பொங்கி வரும் கண்ணீரைக் கண்ணிதழ்களுக்குள்ளே அடக்கி, ஏதோ தூசி விழுந்து விட்ட கண்களைத் துடைத்துக் கொள்வதைப் போலப் பாசாங்கு செய்கிறாளே, அது யாருக்குத் தெரியும்? பெற்ற தாயாரிடம் கூடச் சொல்ல முடியாத அவஸ்தைகள் எத்தனை எத்தனையோ?



எல்லா வெளிநாட்டுப் பயணிகளும் ஒரே பண்புடன், ஒரே நாகரிகத்துடனா நடந்து கொள்கிறார்கள்? ஒருவன் விடைபெற்றுக் கொள்ளுகையில் கையிலோ நெற்றியிலோ முத்தமிட வந்தால் இன்னொருவன் போதையில் அவளுடைய இடையைப் பற்ற முயற்சி செய்கிறான். ஒரு நாள் ஒரு ஜெர்மானியன் கல்லில் செதுக்கிய நிர்வாணத்தைப் பார்த்து விட்டுப் பரவச நிலையை எய்தினான். அவன் தன் பரவசத்தைத் தன்னுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. லாவண்யாவின் புடவைத் தலைப்பைச் சடாரென்று பிடித்து, மார்பைத் திறந்த வெளியாகக் காட்ட, வெறிக் கோலம் பூண்டான். இப்போது இந்தியாவில் ஆயிரமாயிரம் பெண்கள் புடவை இல்லாமல் புதுப் புது வகையில் அலங்காரம் செய்து கொண்டு மேனாட்டுப் பெண்களைப்போல் மார்பின் அழகுகளையும் அங்கங்களையும் காட்டிக் கொள்கிறார்கள்தான். ஆனால் லாவண்யாவுக்குப் புடவைதான ஒரு கவசமாகத் தோன்றுகிறது. அந்த ஜெர்மானியனை அவளால் கைநீட்டி அடிக்க முடியவில்லை. தனக்கு அன்றாடம் கிடைக்கும் இருபது ரூபாய்க்கு இதுவும் அனுபவிக்க வேண்டிய நிர்ப்பந்தம் என்று தன்னுள்ளே நொந்து கொண்டாள்.

எல்லா அனுபவங்களையும் நினைவுகளையும் அப்புறப்படுத்தியது ரஷியாக்காரன் ஐவான் செய்த காரியம். பல பயணிகள் அழகர் மலை அடிவாரத்தில் வெய்யில் காரணமாகத் தங்கிவிட, அவன் மட்டும் மலை மேலே ஏறிப் பார்க்கலாம் என்றான். முருகன் என்று ஒரு தெய்வம், அவன் யுத்தத்துக்குப் போனான், தன்னுடைய சேனை வீரர்களை ஆறு முக்கியமான இடங்களில் அமைத்துக் கொண்டான், ஒவ்வொரு இடமும் ஒரு புண்ணிய ஸ்தலமாயிற்று என்று லாவண்யா அறு படைவீடுகளை விவரித்து, அவற்றில் ஒன்று பழமுதிர்ச் சோலை, அது மலைமேலே இருக்கிறது என்று பயணிகளுக்கு விளக்கினாள். ரஷ்யாக்காரன் லெனின்கிராட், ஸ்டாலின்கிராட் யுத்தகளங்களைப் பற்றி நினைத்து விட்டான் போலிருக்கிறது. ஏதோ யுத்தச் சின்னங்கள் பழமுதிர்ச் சோலையில் இருக்கின்றன என்று

## நிஜமாகவா?

டெல்லியில் நடந்த சர்வதேச சினிமாப் பட விழாவுக்கு யாருக்குமே இலவச பாஸ்கள் கொடுக்கப்படவில்லை. செய்தித் துறை அமைச்சர் சுக்லாவும் அவரது குடும்பத்தினரும் கூட பணம் கொடுத்து டிக்கெட் வாங்கிக் கொண்டு படம் பார்த்தனர்.

- டெக்கான் ஹெரால்ட் - கே. ஆர்.

ஊகித்து, தன் ஊகம் சரியா என்று பார்க்க விர்ரென்று மலை ஏறக் கிளம்பினான். கூடவே லாவண்யாவையும் அழைத்தான். காலையிலிருந்து சிரிக்கச் சிரிக்கப் பேசி வெய்யிலின் கொடுமை எந்தப் பயணிக்கும் தெரியாவண்ணம் இதமளித்த அவன் ஒரு நல்ல மனிதன் என்றுதான் லாவண்யா நினைத்தாள். அந்த நினைப்பில்தான் அவளும் சரி என்று அவனைப் பின்தொடர்ந்தாள்.

அடிவாரத்தில் அழகர் கோயில் மண்டபத்தில் மற்றப் பயணிகள் நிழலில் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்க, பதை பதைக்கிற வெய்யிலில் இவான் சீட்டி அடித்துக் கொண்டே நடந்தான். லாவண்யா, கடும் குளிரில் வாழ்ந்து வருகிறவனால் எப்படி இந்த நூற்றிரண்டு டிகிரி வெய்யிலையும் தாங்கிக் கொள்ள முடிகிறது என்று ஆச்சரியப்பட்டாள்.

இருநூறு அடி உயரம் போன பிறகு அந்தப் பயணி ஒரு மரத்தின் நிழலில் நின்றான். ஒருசில நிமிடங்களில் லாவண்யாவும் அவன் அருகே வந்தாள்.

''இந்த நேரத்துக்குத்தான் நான் காத்திருந்தேன்!'' என்ற அவன் அவள் சற்றும் எதிர்பாரா வகையில் அவளைப் பற்றி இழுத்தான். அவனுடைய அணைப்பு கழுத்தை நெரிப்பது போல் இருந்தது. ஏற்பட்ட விபரீதம் ஓர் அவலமாக வளர்ந்து வாழ்க்கையில் அழிக்க முடியாத ஓர் அழுக்கு முத்திரையாகப் போய்விடக் கூடாது என்ற எண்ணம் லாவண்யாவின் புத்தியில் மின்னலாகப் பட்டது. என்றுமே நிதான புத்திக்காரி, தைரியம் நிறைந்தவள் என்றெல்லாம் பெயர் வாங்கியவள் அடுத்த வினாடியே கத்தினாள்: ''ஸ்னேக்... ஸ்னேக்!'' அவளுடைய குரல் அவளுக்கே செயற்கையாக ஒலித்த போதிலும் அதன் பயங்கரம் குறையவில்லை.

ரஷியாக்காரனுக்குப் பாம்பு என்றால் பயம் என்று அவளுக்கு அன்று காலையில்தான் தெரிய வந்தது.

அடுத்த கணம் அவனுடைய பிடி தளர்ந்தது. அவன் நகர்ந்து ஓட யத்தனித்தான். அதே சமயம் விடுவிக்கப்பட்ட லாவண்யா கீழே சிதறிக் கிடக்கும் கற்களில் இரண்டு மூன்றை எடுத்தாள். பாம்பை அடிக்கத்தான் கல்லை அவள் எடுக்கிறாள் என்று இவான் தப்புக் கணக்குப் போட்டான். அதற்குத் தண்டனையாக மண்டையில் கல் குறி தவறாமல் விழுந்தது. அவன் நகருவதற்குள் தோள் பட்டையை இன்னொரு கல்—சற்றுப் பெரிய கல் — தாக்கியது.

நெற்றியில் ஊற்றெடுத்த இரத்தத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே அவன் வெறி பிடித்தவன் போல, துரத்தும் எண்ணத்துடன் ஓட ஆரம்பித்தான். லாவண்யா செய்த புண்ணியம், இரண்டாவது அடியிலேயே கால் தடுக்கி விழுந்தான்.

நூற்று இரண்டு டிகிரி வெய்யிலில், கல்லும், முள்ளும் பரவிக் கிடக்கும் தரையில் அவன் விழுந்து கிடக்கும் காட்சியைப் பார்த்து ரசிக்க வேண்டும் என்று ஓர் அற்ப ஆசை அவளை உந்திய போதிலும் ஒரு மிருகத்திடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டியதுதான் முதல் காரியம் என்று அவள் ஓடினாள்.

அடிவாரத்துக்கு வந்த பிறகுதான் அவளால் இரைக்கும் மூச்சை நிதானப்படுத்த முடிந்தது.

கால் மணி நேரத்துக்குப் பிறகு ரஷியன் இவான் திரும்பி வந்தான். எதுவுமே நடக்காத தோரணையில் பஸ்ஸில் ஏறி, தான் கீழே விழுந்து அடிபட்டுக் கொண்ட அதிசயத்தை ஒரு சரித்திரம்போல் விவரித்தான். கடைசியாகப் போகும்போது, லாவண்யாவிடம், தன் கீழ்த்தரமான செயலுக்கு மன்னிப்பும் கேட்டான், இவான்.

லாவண்யா இப்போது , பழைய அனுபவங்களையும் கசியும் புண்களையும் நினைத்துப் பார்த்தபோது வாழ்க்கையே ஒரு கேவலமான உயிரோட்டமாகப் பட்டது. ரமணியைப் போன்ற கோழைகள், கான்வேயைப் போன்ற அசடுகள், இவானைப் போன்ற பாதகர்கள் உலகில் இருக்கும் வரைக்கும் உலகம் இப்படித்தான் இருக்கும் என்று அவள் ஏதோ ஒரு பெரிய தத்துவ உண்மையைக் கண்டு பிடித்துவிட்டதைப் போல் தன்னைத் தேற்றிக் கொண்டாள்.

• • •

அவள் பஸ் நிலையத்தை அடைந்தபோது ஆறு மணிக்கு மேலாகி விட்டது. கான்வேயை இனிமேல் அடிக்கடி சந்திக்கக்கூடாதென்று அவள் மனத்தில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினாள். அவளுடைய சரளமாகப் பேசும் சுபாவம் அவளுக்கே அமைந்துவிட்ட விதியாக இருக்கக் கூடாது. அவளுக்கு அமெரிக்கா வேண்டாம். இந்த மதுரையும் இதே மீனாட்சி சுந்தரேசுவரரும் போதும். கழுத்தில் ஒரு மஞ்சக் கயிறு ஏறி, அவளும் ஒருவனுடைய நிழலில் பயமின்றி, பீதி இன்றி அவஸ்தை இன்றி வாழும் நாள் பிறந்து விட்டால், அன்றே எல்லாம் விடிந்துவிடும். கட்டியவன் அன்பும், பாதுகாப்பும் தோழமையும் கொடுப்பான். அதற்குக் கைம்மாறாக அவள் அவனுடைய பரம்பரை தொடர உதவி செய்வாள்.

திடீரென்று ''ஹலோ லாவண்யா!'' என்ற குரல் கேட்கவே திரும்பிப் பார்த்தாள்.

கிஷூ மொட்டை வாயெல்லாம் பல்லாக நின்று கொண்டிருந்தான்.

# எந்த முகப்பரு க்ரீம், பருக்களுக்கு சிகிச்சை யளிப்பதோடு வடுப் படியாமல் தடுக்கவும் உதவுகிறதோ அதுவே உங்களுக்கு உகந்தது:



# எஸ்கமெல்*

## முகப்பரு க்ரீம்




டாக்டர்கள் சிபாரிசு செய்யும்
முகப் பரு க்ரீம்

எச்சரிக்கையோடு இருக்கத் தவறினீர்களானால், பருக்கள் உங்கள் முகத்திலே கோரமான வடுக்களை விட்டுச்செல்லக்கூடும். (அரிப்புத் தோன்றினாலும் சரி) பருக்களைத் தொடாமலிருப்பதே நல்லது. அதோடு, எஸ்கமெல் உபயோகியுங்கள்: முகப் பருக்களுக்கு சிகிச்சையளிப்பதோடு, வடுப் படியாமலும் தடுத்திடும் முகப் பரு க்ரீம் அது.



தொடாதீர்கள்! குத்தினாலும், சொரிந்தாலும், தொட்டாலும் கூட முகப் பருக்கள் பரவும்.



சாப் பஞ்சு கொண்டு முகத்தின் மீது எஸ்கமெல் இடுங்கள்.



பருக்கள் பரவாத-படி தடுத்து, சருமத்தில் எண்ணெய்வடியும் மிகைத் தன்மை-யைக் குறைத்து முகப்பருக்களை விரைவில் மறையச் செய்கிறது எஸ்கமெல்.

**SK&F** ஸ்மித், க்லைன் & ஃப்ரெஞ்ச் தயாரிப்பு.
* எஸ்கமெல் என்பது ஒரு ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க் ஆகும்.

லிண்டாஸ்–ESK-3-203 TH

''ஓ, நீயா?'' என்று லாவண்யா, ''ஆமாம் நீ எங்கே இந்தப் பக்கம்? இங்கே ரேஷன் கடை கூட இல்லியே?'' என்று கேட்டாள்.

''க்யூவிலே நிக்காம பஸ்ஸிலே போய் ஒரு காரியத்தை ரமணி முடிச்சுட்டு வரச் சொன்னான். மீட்டர் ரேட்டைக் கொடுத்தா நான் என்ன வேணும்னாலும் செய்வேனே?''

''என்ன வேலை?''

''ஏதோ ஒரு கடிதாசை உடனடியாக் கொடுத்துட்டு வான்னான்...''

''யார் கிட்டே?''

''இன்னொரு வக்கீல்கிட்டேன்னு வைச்சுக்கோயேன்... ஆமாம் வியாபாரமெல்லாம் எப்படி ஓடறது?''

''மோசமில்லே...அவ்விடம் எப்படியோ?''

''ரயில்வே ஸ்டேஷன், ஸ்டேட் பாங்க், ரேஷன் ஷாப், சினிமாத் தியேட்டர் இந்த நாலும் இருக்கிறவரைக்கும் என் பிழைப்புக்கு மோசமில்லே. மீட்டர் ரேட்டை உயர்த்தறதா வேண்டாமா என்றுதான் இப்போ யோசிச்சிண்டிருக்கேன்.''

''இப்போ என்ன ரேட்? மணிக்கு ஒரு ரூபாய்தானே?''

''ஆமாம். விலை வாசி பேப்பரிலேதான் இறங்கறது. கடைகளிலே ஏறிண்டே போறது கட்டுப்படியாகவில்லே.''

''ரேட் இருக்கட்டும். உன் மீட்டர் சரியா?''

''அதென்ன லாவண்யா அப்படிக் கேட்டுட்டே... இது எச். எம். டி. மாமா மெட்ராஸ்லேந்து வாங்கிண்டு வந்தார். சிடிஸன் வாட்ச். பாரு. படு கரெக்டா போறது!''

''மொட்டை?''

''என்ன லாவண்யா?''

''எகனாமிக்ஸ் பி. ஏ. பாஸ் பண்ணிட்டு நீ இந்த வேலைக்கு வந்திருக்க வேண்டாம்.''

''ஹிஸ்டரி பி.ஏ. படிச்சுட்டு நீ என்ன கிழிச்சே? மதுரையா உன் ஸ்பெஷல் சப்ஜெக்ட்? ஹாய், ஹூய், டார்லிங்னு கூத்தடிக்கிறார்களே, அவர்கள் கிட்டே நீ என்ன சரித்திரமா பேசறே?''

''வயிற்றுப் பிழைப்பு.''

''உனக்கு ஒரு நாளைக்கு இவ்வளவுன்னு வர்றது. எனக்கு ஒரு மணிக்கு இவ்வளவுன்னு கிடைக்கிறது.... இதோ பாரு, நாம யார்கிட்டேயும் பொய் சொல்லக் கூடாது; யாரையும் ஏமாத்தக் கூடாது... அவ்வளவுதான். பிறத்தியாருக்காக நான் க்யூவிலே நின்னு பத்தும் பன்னண்டுமா சம்பாதிக்கறது தப்புன்னு எனக்குப் படலை... க்யூவிலே நிக்கறபோது கையிலே ஒரு நாவலை வைச்சுக்கறேன்.... பொழுதும் போயிடறது.''

''அதோ பஸ் வர்றது.''

''நீ போ... நான் அடுத்த பஸ்ஸிலே வரேன்....''

''ஏன், மீட்டரைப் போட்டு வைச்சிருக்கியா?''

''இல்லே... அந்த வக்கீல் என்னை இங்கே காத்திருக்கச் சொல்லியிருக்கான்.''

''அம்மா கிட்டே விசாரிச்சதாகச் சொல்லு.''

''சொல்றேன். ஆனா அவளுக்குக் காதிலே விழாது. சரியான டமாரமாயிட்டா.''



**கொள்ளையாக அல்லவா இருக்கிறது?**

பம்பாயில் ஒரு 5 நட்சத்திர ஓட்டல் ஒரு பழைய விக்டோரியா கோச் வண்டியை வாங்கி அதைப் புதிதாக்கி, வெல்வெட் மெத்தைகள் போட்டு, பித்தளை விளக்கு போட்டு ஒரு பெரிய பஞ்சாப் குதிரை பூட்டி ஓட்டுகிறது. இதில் ஏறிச் சென்று பம்பாயில் பல இடங்களைப் பார்க்க வெளி நாட்டவர்கள் பெரிதும் விரும்புகிறார்களாம். இதில் போய் வர வாடகை மணிக்கு 35 ரூபாய்!

- டைம்ஸ் ஆப் இந்தியா - பாபு

பஸ்ஸில் செல்லும்பொழுது 'க்யூ' மொட்டையைப் பற்றி மனம் ஓடியது.

நாவப்ப முதலி அக்கிரகாரத்தில் மொட்டையின் தகப்பனார் ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்தவர். வைரம் பார்ப்பதில் நிபுணர் என்று பெயர் வாங்கியவர். சொந்தமாக வியாபாரம் ஏதுமில்லை. வைகை அணைக்கட்டு வருவதற்கு முன்பு நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலம் பிதிரார்ஜித சொத்தாக வந்தது. அணைக்கட்டு வேலைக்கு அவருடைய நிலத்தின் பெரும் பகுதி சர்க்காருக்குத் தேவையாக இருக்கவே, நிலத்துக்கு ஒரு டெபுடி கலெக்டர் ஒரு விலையை நிர்ணயித்து ஆர்ஜிதப்படுத்தி அவர் கையில் அரை லட்சத்துக்கு மேல் கொடுத்தார். பாங்கியில் சில மாதங்கள் முடங்கிய பணம் மெள்ள மெள்ளக் கரைந்தது. நகரிலுள்ள வைர வியாபாரிகளுக்கெல்லாம் நோட்டம் பார்த்துவிட்டு அவர்கள் உபசரிக்கும் காப்பி பலகாரத்துடன் திருப்தி அடைந்த மொட்டையின் தகப்பனார் வளர்ந்து கொண்டு வரும் பெண்ணையும் பிள்ளையையும் பற்றிக் கவலைப் படவில்லை. பெற்றவள் ஒரு சாது. கணவர் எது செய்தாலும், அதுதான் சரி, எது சொன்னாலும் அதுதான் உண்மை என்று பதி பக்தியை ஒரு விரதமாக அனுஷ்டித்து வந்தவள்.

மீனலோசனி என்கிற மீனு கல்யாண வயதை அடைந்தபோது, மொட்டையின் தகப்பனார் காலமானார். அப்போது அவனுக்கு வயது எட்டு. அம்மா சகல நகைகளையும் விற்று, போபாலில் வேலை பார்க்கும் ஒரு பிள்ளைக்கு மீனுவைக் கல்யாணம் செய்து கொடுத்தாள். மதுரை மீனாட்சிக்கு மீனு மதுரையை விட்டுப் போனது பிடிக்கவில்லை போலிருக்கிறது. எட்டாம் மாதமே குங்குமம் இட்டுக் கொள்ளாத நிலையில், கட்டினவனுக்கு கிடைத்த நூற்றி இருபது ரூபாய் பென்ஷனுடன் திரும்பி வந்தாள்.

மொட்டைக்கு எல்லாமே ஓர் அர்த்த மற்ற கதையாகப் பட்டது. வைர நோட்டத்தில் நிபுணராக இருந்த அப்பாவுக்குப்

பிழைக்கத் தெரியவில்லை. அவரையே தெய்வமாக நம்பின தாயாருக்கு ஏன் இப்படி வாழ்வு ஒரு சோகமாக அமைய வேண்டும்? சேதுபதி ஸ்கூலில் படிக்கிற நாட்களில், மற்ற பிள்ளைகள் தமுக்கம் மைதானம் வரை விலும் சென்று பற்பல விளையாட்டுக்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கையில் அவன் வடக்குச் சித்திரை வீதி வரை நடந்து வெய்யில் என்றும் மழை என்றும் பாராமல் மொட்டைக் கோபுரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து கொள்ளுவான். மணிக் கணக்காகக் குடும்பத்தைப் பற்றியும் தன்னைப் பற்றியும் ஆராய்வான். எல்லாக் காரியங்களுமே அர்த்தமற்றுச் செய்யப்படும் காரியங்களாகப் பட்டன. மனிதன் எதைச் செய்தாலும் அதில் ஒரு பலனை — அதுவும் பண ரூபத்தில்— எதிர்பார்க்கிறான் என்று அவன் நினைத்தான். இந்த எண்ணம் வலு அடைய அடைய, உலகத்தில் பணத்தை மிஞ்சிய தெய்வம் எதுவுமே இல்லை என்று மனம் கறுவியது.

கல்லூரியில் படித்து ஒரு பட்டத்தை வாங்குவதால் எந்த லாபமும் இல்லை என்பது அவனுடைய அசைக்க முடியாத கருத்தாக இருக்க போதிலும், தாயாரின் கண்ணீரைத் துடைக்கவாவது பி. ஏ. டிகிரி வாங்க வேண்டும் என்று தோன்றியது. படிப்பு அவனையும் மீறி நன்றாக வரவே, உபகாரச் சம்பளமும் கிடைத்தது.

பிள்ளை நன்றாகப் படிக்கிறான், டிக்ரி வாங்கியதும் ஒரு பாங்கியில் வேலை கிடைக்கும் என்று தாயார் நம்பினாள். அவனுடைய போதாத காலம் அவன் தேர்வு பெற்ற ஆண்டில் பாங்கில் நிறைய ஆட்களை எடுக்கவில்லை. எடுக்கப்பட்ட ஒருசிலர் அவனைவிடத் தகுதி வாய்ந்தவர்களாக இருந்தார்கள். அரசு காரியாலயங்களிலும் மதுரை கார்ப்பரேஷனிலும் முயற்சி செய்தான். அவன் பிறந்த இனம் குறுக்கே நின்றது. ஓரிரண்டு இடங்களில் வாய்ப்பு ஏற்பட்டபோது, கறுப்புச் சிவப்புத் தம்பிகள் ஒரு மாத இரண்டு மாதச் சம்பளத்தை அன்பளிப்பாக வைக்க வேண்டும் என்று நிபந்தனை விதித்தார்கள்.

ஒரு நாள் யாரையும் வஞ்சிக்காமல், பொய் சொல்லாமல் சம்பாதிக்க முடியுமா என்று மொட்டை ஆராய்ந்தான். திடீரென்று 'க்யூ' கண்ணில் பட்டது. 'க்யூ'வில் நிற்கும் மனிதர்களில் எத்தனையோ பேர் காரியாலயங்களுக்கு லீவு போட்டு விட்டு வருகிறவர்கள். இன்னும் சிலர் பல முக்கிய வேலைகளை விட்டு விட்டு நிற்கிறவர்கள். எத்தனையோ பணக்கார வீட்டுப் பெண்களும், பிள்ளைகளும் 'க்யூ'வில் நிற்கக் கூசப்படுகிறவர்கள்.

அவர்களுடைய பலவீனம் அவனுடைய நிச்சயமான, நிரந்தரமான வருவாய்க்கு அஸ்திவாரமாக அமைந்தது.

சில மாதங்களிலேயே அவனுடைய உண்மைப் பெயர் மறைந்து, 'க்யூ' மொட்டையாகி விட்டது. ஒரு மணிக்கு எட்டணாவாக ஆரம்பித்தது இப்போது விலைவாசி ஏற்றத்தினால் ஒரு ரூபாய்க்கு உயர்ந்திருக்கிறது. இன்னும் ஏற்ற நினைக்கிறான்.

அவனுடைய லட்சியமெல்லாம் அம்மா சந்தோஷமாக வாழவேண்டும் என்பதுதான். இந்த லட்சியம் நிறைவேறி விட்டால், ஆரம்பப் பாடசாலையில் வேலை பார்க்கும் மீனு அக்காவைப் பற்றிக்கூட அவன் அதிகம் கவலைப்படத் தேவையில்லை.

• • •

லாவண்யா பெருமூச் செறிந்தான். இரண்டு வருடங்களுக்கு முன் ஒரு நாள் ஏதோ காரியமாக அவனைத் தேடிக் கொண்டு மொட்டை வந்தபோது அவன் தன் வாழ்க்கைச் சரித்திரத்தையே அவளிடம் சொன்னான். அந்தக் கதை இன்று அவனைப் பார்த்தபோது ஒரு திரைப் படமாகக் கண் முன் நின்றது.

பஸ்ஸை விட்டு இறங்கும்போது இன்னோர் எண்ணமும் அவளுள் மின்னலாகத் தோன்றி வதைத்தது.

மொட்டை தன் தாயாருக்காக வாழ்கிறான்!

ஆனால் அவள்?

யாருக்காக வாழ்கிறாள்?

அவனுக்காகத்தான்!

இந்த உண்மை முகத்தில் அடித்தபோது, கான்சர் நோயில் வீழ்ந்து விட்ட அப்பா கண் முன்னே சாம்பலாகிக் கொண்டிருக்கும் காட்சி தோன்றியது. (தொடரும்)

# அவன் பார்த்துப்பான்

கோமல் சுவாமிநாதன்

"அப்படின்னு இப்ப இருக்கிற சட்டத்திலே அயோக்கியன்களுக் குத் தண்டனை இல்லேன்னு சொல்றீங்களா?"



## காட்சி 12

(மூங்கில் பூ அலுவலகம் சொக்கலிங்கம் அமர்ந்திருக்கிறார். சர்மா வருகிறார்.)

சர்மா: நான்தான் சமையல் சர்மா. என்னை ஏதோ பார்க்கணும்னு கூப் பிட்டனுப்பினீங்களாம்.

சொக்க: ஆமா. இந்த ஊரில பெரிய கல் யாணங்களுக் கெல்லாம் நீங்கதானே சமையல்?

சர்மா: அநேகமா அப்படித்தான்.

சொக்க: என் நண்பனின் மகளுக்கு அடுத்த மாசம் ஆபட்ஸ்பரியில் கல்யாணம்.

சர்மா: பேஷாச் செய்து கொடுக்கிறேன்.

சொக்க: இந்த மாதிரி பெரிய கல்யாணங் களுக்கெல்லாம் நீங்க எவ்வளவு ரேட் வாங்குறேங்கன்னு தெரியும்.

சர்மா: ரொம்ப சந்தோஷம். அப்போ நான் பேச வேண்டிய சிரமம் இல்லே!

சொக்க: இருபது கல்யாணங்களுக்கு என்ன ரேட் உண்டோ, அதை உங்களுக்கு நான் தரப் போறேன்.

சர்மா: ஏது இருபது கல்யாணம்? ஒரு கல்யாணம்தானே சொன்னேள்!

சொக்க: ஆமா. இந்த வருஷம் முழுவதும் நீங்க அடுப்படியிலே வேகாமல் சௌகி யமா இருக்கும்படியா நான் பண வசதி செய்து தரப்போறேன்.

சர்மா: ஏது, பெரியவாளுக்கு என்ன திடீ ருன்னு என் மேலே கருணை பிறந்துடுத்து!

சொக்க: ஆமா... என் கருணைக்கு நீங்க பாத்திரமானவர். சிவராமனுக்கு நீர் ரொம்ப வேண்டியவராமே!

சர்மா: ரொம்ப வேண்டியவர்தான். யார் இல்லேன்னு சொன்னது?

சொக்க: நீங்க கிழிச்ச கோட்டை அவன் தாண்டறது இல்லையாமே!

சர்மா: நான் கோடு கிழிக்கிறதுமில்லே, அவன் தாண்டறதும் இல்லே.

சொக்க (சிரித்து): அவனை ஒரு விஷயத்தில் சம்மதிக்க வச்சா உங்களுக்கு...

சர்மா: இருபது கல்யாணங்களுக்குள்ள சம் பளம் கிடைக்குமாக்கும்!

(சொக்கலிங்கம் ஒரு கவரை நீட்டு கிறார்.)

சர்மா: என்ன, ஒரு இரண்டாயி ரம் உள்ளே போட்டிருப்பேளா?

சொக்க: அப்போ ஒரு கல்யா ணத்துக்கு உங்களுக்கு நூறு ரூபாய்தான் கிடைக்குமா?

சர்மா: ஆமா. ஆனா ஜாங் கிரி சுத்த, லட்டு பிடிக்க எல்லாம் தனியா வாங் கிடுவேன்.

சொக்க: அப்படியானால் இதில் ஐம்பது கல்யாணத் துக்கான பணம் இருக்கு.

சர்மா: ஐயாயிரமா? இந்தச் சனியனைத் தொடவேபயமா இருக்கு!

சொக்க: தைரியமா எடுத் துக்குங்கோ.

சர்மா: சரி, இதை எடுத்துண்டு நான் என்ன பண்ணனும்?

சொக்க: சிவராமன் உங்க சொல்லே மீறுத வன்னு எங்களுக்குத் தெரியும். அதனுல நீங்க செய்ய வேண்டிய காரியம் 'பிரசாத் விஷயமா நீ தலையிடாதே! சொக்கலிங் கத்துக்கு எதிராப் போகாதே'ன்னு அவன் மனசுலே லேசாத் தெளிச்சாப் போதும்.

சர்மா: ஓஹோ! தெளிக்கிறதுக்குக் கமிஷனு? தெளிச்சிடறேன். ஆனு அவன் என் சொல்லே மீறி அப்படித்தான் செய் வேன்னு ஆரம்பிச்சா என்ன செய்யட்டும்?

சொக்க: உங்க சொல்லே மீறமாட்டான்னு நிச்சயமா எனக்குத் தெரியும்.

சர்மா: உங்களுக்குத் தெரிஞ்சாச் சரிதான். ஆனு அவன் முடியாதுன்னு சொல்லிட்டா கட்டியிருக்கேனே. மாஜிஸ்டிரேட் பிள் ளேயா ஒரு பொண்ணுக்கிட்ட அப்படி விளேயாடியிருக்கான்?

தீர்த்தபதி: என்னேயா அதில தப்பு?..... நானே.....

சர்மா: நீங்களேவா?

தீர்த்த: ஆமாமய்யா... நானே அவனேக் கண்டிச்சிருக்கேன். கேக்கல்லே. இது வெளியே வந்தால் எனக்கு அவமானம்.

சர்மா: என்ன பண்றது! பேய்க்கு வாழ்க் கைப்படற கதைதான்.

தீர்த்த: இந்த விஷயத்தை வெளியே வராம உம்மால செய்ய முடியும். சிவராமன் கிட்ட உங்களுக்குள்ள இன்ஃபுளுயன்ஸை உபயோகப்படுத்தி ஒண்ணுமில்லாம அடிச் சிடுங்கோ.



சர்மா: அதாவது அந்தப் பொண்ணே ஒண்ணுமில்லாம அடிச்சுடப்போறேன்.

தீர்த்த: என்னேயா பெரிய பொண்ணு! ஏதோ அனுமத்துக் கழுதை. அதன் தலே விதி தப்பு நடந்து போச்சு. இதைப் பெரிசா எடுத்துண்டு குதிக்கிறீங்க.

சர்மா: தப்புதான். ஐயாயிரம் ரூபாயை என் கையில் திணிச்சிருக்கேளே.

(காளமேகத்தின் தந்தை பஞ்சநதம் வருகிறுர்.)

சர்மா: அண்ணு! நீங்களா?

சொக்க: பஞ்சநதத்தை உமக்குத் தெரி யுமா?

பின்னுலே வருத்தப்படப்படாது! இந்தப் பணத்தையும் திருப்பிக் கேட்கப்படாது.

சொக்க: நிச்சயமாகக் கேட்க மாட்டோம்!

சர்மா: கேக்க மாட்டோம்கிறேளே! இதில வேற யாராவது சேர்ந்திருக்காளா?

சொக்க: ஆமா, என் மாதிரி அவதிப்படும் இரண்டு தகப்பன்மார்கள்... தீர்த்தபதி!

(தீர்த்தபதி வருகிறுர்)

இவர் நீலகண்டனுடைய அப்பா!

சர்மா: இவர் மாஜிஸ்டிரேட் இல்லேயோ? சைக்கிள்லே லைட் இல்லாம போனதால் இவருக்கிட்ட ஐந்து ரூபாய் அபராதம்

சர்மா: சரியாப் போச்சு. போங்கோ! அதென்ன, அப்படிக் கேட்டுட்டேள்? பின் ஸேயார் கோவிலுக்கு இவர் கும்பாபிஷேகம் பண்ணினர். என்னைத்தான் சமையலுக்குக் கூப்பிட்டார். எத்தனை பேருக்குச் சமையல்னேன். நூறு பேருக்குத் தான்னரு. ஆறு ஆயிரம் பேருக்குச் சமையல் செய்ததாக வவுச்சரில் கையெழுத்துப் போடணும்னர். மாட்டேனுட்டேன். கோபம் வந்து விட்டது. போகச் சொல்லி விட்டார்!

பஞ்சநதம்: அது போகட்டும்பா. அதைப் பத்தி இப்ப என்ன பேச்சு? என் பிள்ளை காளமேகம், அவன் கூட்டாளிகள் இதுல இருந்து விடுபடணும். அதுக்குச் சிவராமனை நீர்தான் வழிக்குக் கொண்டுவரணும்.

சர்மா: எவ்வளவு பெரிய வேலை கொடுத்திருக்கேள், மொத்தமா ஐயாயிரம்தானே கொடுத்திருக்கேள். ஆளுக்கு ஐயாயிரம் கொடுக்கலாமே!

பஞ்ச: நீர் ரொம்பப் பேராசைப் படறீர். வந்ததை வச்சிண்டு சந்தோஷமாப் போய் வேலையை முடியும்.


"என் பிள்ளை காளமேகம், அவன் கூட்டாளிகள் இதுல இருந்து விடுபடணும். அதுக்குச் சிவராமனை நீர்தான் வழிக்குக் கொண்டுவரணும்."

"எவ்வளவு பெரிய வேலை கொடுத்திருக்கேள், மொத்தமா ஐயாயிரம்தானே கொடுத்திருக்கேள், ஆளுக்கு ஐயாயிரம் கொடுக்கலாமே!"


சர்மா: கையை நீட்டிப் பணத்தை வாங்கிட்டேன். இதில நீ தலையிடாதேன்னு சொல்ல மாட்டேளு, என்ன?

(சிவராமன் வருகிறான்.)

சிவரா: சர்மாஜி, நீங்க எதுக்கு இங்கே வந்தீங்க?

சர்மா: முக்கியமான விஷயம் பேசணும்னு கூப்பிட்டனுப்பிளு. வந்தேன். நீ எதுக்கு வந்தே?

சிவரா: நீங்க இங்கே வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். உங்களுக்கு ஒண்ணும் ஆபத்து வரக் கூடாதேன்னு வந்தேன்.

சர்மா: எனக்கு ஏன் ஆபத்து வரது! சிவராமா, ஒண்ணு சொல்றேன், கேப்பியா?

சிவரா: என்ன, சொல்லுங்க!

சர்மா: இவர் உன் பழைய முதலாளி. அவர் தீர்த்தபதி. நீலகண்டத்துக்கு அப்பா. ஜட்ஜ் பதவியை எதிர்பார்த்துண்டு இருக்கார். இவர் பஞ்சநதம்.— நிறையக் கவர்ன்மெண்டு காண்டிராக்ட் எடுத்துச் செய்கிறார். வேங்கடாசலபதிக்கு மாசம் ஒரு கல்யாணம் பண்ணி வைக்கிறார். இவர்களுடைய புள்ளைகள் எல்லாம் பென்சிலைத் திருடற மாதிரி ஏதோ ஓர் அல்பமான குத்தத்தைப் பண்ணிட்டா. இதை நீ பெரிசு பண்ணிண்டு இருக்காதே. விட்டுடு.

சிவரா: சர்மாஜீ.... என்ன சொல்றீங்க!

சர்மா: நான் சொல்றேன். இந்த விஷயத்தைக் கைகழுவிடு.

சிவரா: முடியாது. என்னால முடியாது!

சர்மா: நான் சொல்லிட்டேன், சார்...அவன் முடியாதுன்னுட்டான். நான் என்ன பண்றது. சொல்லுங்கோ! பணத்தை மட்டும் திருப்பிக் கேட்டுடாதிங்கோ.

சிவரா: பணமா?



சர்மா: ஆமா. உங்கிட்ட இப்படிச் சொல்றதுக்காக அவா பணம் கொடுத்தா. நான் சொல்லிட்டேன். கண்டிராக்ட் முடிஞ்சு போச்சு, வா, போகலாம்.

சிவரா: அந்தப் பணத்தை அவங்க முகத்தில வீசி எறிங்கோ.

சர்மா: நன்னு இருக்கு! வீசி எறியறதாவது! நான் வேதம் படிச்ச திருப்பராய்த்துறை பாடசாலையை வருமானமில்லாததால் மூடப்போறான்னு கேள்விப்பட்டேன். காலம்பற இருந்து மனசை உறுத்திண்டு இருந்தது. எப்படியாவது ஓர் ஐயாயிரம்




ரூபாய் சேர்த்துக் கொடுக்கணும்னு ஆசைப்பட்டேன். ஆண்டவன், 'ஏண்டா சர்மா, கண்ட இடத்தில அலையணும்? இந்த இடத்துக்குப் போ. உனக்குப் பணம் தயாரா இருக்குன்'னு இங்கே அனுப்பி வச்சிட்டான்.

சொக்க: சர்மா! மரியாதையாப் பணத்தைத் திருப்பித் தாரும். இல்லே, உம்மைப் போலீஸிலே 'ஹான்ட்ஓவர்' பண்ணுவேன்.

சர்மா: போலீஸிலேயா? சில பணக்காரா சில பணங்கள் கொள்ளை போனுக் கூட வாயை மூடிண்டு திருடனுக்குத் தேள் கொட்டின மாதிரி இருப்பா. அதுவும் எனக்குத் தெரியும். இதை நாம லீகலாகவே பண்ணிடுவோம். நாளைக்கே இதுக்கு ரசீது கொடுத்திடறேன். உங்க மூன்று பேர் போட்டோ இருந்தாக் கொடுங்க. பாடசாலையிலேயே மாட்டிடுவோம். நாலு குழந்தைகள் சந்தோஷமா வேதம் படிக்கட்டும். அதனுலே லோகம் சுபிட்சமடையும். நாய் வித்த காசு குலைக்கவா செய்யும்?

*(சர்மாவும் சிவராமனும் போக மூவரும் திகைத்து நிற்கிறார்கள்.)*

## காட்சி 13

*(லீடிங் கிரிமினல் லாயர் வெங்கடாத்ரி வீடு. வெங்கடாத்ரியும் சிவராமனும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.)*

வெங்கடாத்ரி: மிஸ்டர் சிவராமன்! நீங்க சொன்ன சம்பவம் உண்மையிலேயே ஓர் அதிர்ச்சி தரும் நிகழ்ச்சி. சமுதாயத்தில் உலாவுகிற இந்த மாதிரி கொடிய மிருகங்களை வலை போட்டுப் பிடிச்சுத் தண்டனை வாங்கிக்கொடுக்கத்தான் சட்டம் இருக்கு. இப்ப நான் என்ன செய்யணும்? சொல்லுங்கோ.

சிவரா: அவனுகளாகவே போலீசில சரணடைவாங்கன்னு எதிர்பார்த்தேன். ஆனு அவுங்க நான் சொன்ன கெடுவுக்குள்ள சரணடையலே! இனிமேல் சரணடைவாங்கங்கிற நம்பிக்கை இல்லே. நாம தான் முயற்சி செய்து சட்டத்தின் பிடிக்குள்ள தள்ளணும். அதனுலதான் கிரிமினல் வழக்குகளில் பெயர் பெற்ற உங்களை நாடி வந்திருக்கேன்.

வெங்க: போலீஸ் கமிஷனரைப் பார்த்தீங்களா?

சிவரா: பார்த்தேன். இதைப் போலீசுத் தரப்புக் கேஸாக எடுத்து வழக்காட எந்த விதத்திலும் சாத்தியக் கூறு இல்லேன்னு சொல்லிட்டார்.

வெங்க: ஏன்?

சிவரா: சம்பவம் நடந்து ஒரு மாசத்துக்கு மேல் ஆயிட்டுது. சம்பவம் நடந்த மறுநாளே அந்தப் பெண் போலீசுல ரிப்போர்ட் கொடுத்திருந்தா, போலீஸ் அந்தப் பெண்ணை மெடிகல் டெஸ்ட்டுக்கு அனுப்பி யிருப்பாங்க. உண்மை தெரிந்திருக்கும். டாக்டர் சர்டிபிகேட்டை வைச்சுப் போலீஸ் 'புரொஸிட்' பண்ணி இருக்கும். ஆனு இப்ப திடீருன்னு எந்த முகாந்திரமும் இல்லாமல் போலீசு கேஸ் எடுத்தா அது கோர்ட்டில நிக்காது. சமுதாயத்தில உள்ள பெரிய மனிதர்களுக்கு எதிராப் பழி வாங்கும் உணர்ச்சியோட இந்தக் கேஸ் ஜோடிக்கப்பட்டதுன்னு போலீஸ் மேலே அபவாதம் வரும். இந்தச் சூழ்நிலையிலே போலீஸ் இதை 'ஹாண்டில்' பண்ண முடியாதுன்னு சொல்லிட்டார்.

வெங்க: அவர் சொன்னது உண்மைதான். ஏன் அந்தப் பெண் உடனடியா நடந்த நிகழ்ச்சியைப் போலீசுல தெரிவிக்கல்லே?

சிவரா: அந்த நிகழ்ச்சியினுலே ஏற்பட்ட அதிர்ச்சி, மனக் குழப்பம். இதனுல தன் மானம் பறி போயிடுமோங்கற பயம். திடீருன்னு ஏற்பட்ட தந்தையின் மரணம் — இந்தப் பலவீனங்களாலே வாயை மூடிக்கிட்டு இருந்துட்டா.

வெங்க: பைத்தியக்காரத்தனம்! பாத்ரூமிலே ஒருத்தன் சறுக்கி விழுந்துட்டான். சறுக்கி விழுந்தது தெரிஞ்சா உலகம் சிரிக்குமேன்னு டாக்டரிடம் போகாம இருந்தா எலும்பு முறிவோட சாக வேண்டியது தான். போலீஸார் ஜோஸியர்கள் இல்லே. மக்களுக்கு ஏற்பட்ட அநீதியை அவங்களாலே ஊகிக்க முடியாது. அதனுலே, நாமதான் போலீஸை அணுகணும்.

சிவரா: போலீஸ் கமிஷனரைப் பார்த்த பிறகு இதைத் தனிப்பட்ட முறையில ஒரு கிரிமினல் கேஸாகப் போடலாம்கிற முடிவுக்கு வந்திட்டேன்.

வெங்க: நியாயம்தான். தனிப்பட்ட முறையில நான் இந்தக் கேஸை எடுத்து நடத்தலாம். ஆனல் நாம மோதப் போறதோ சமுதாயத்தின் பெரிய மனிதர்கள். அதுக்குத் தகுந்த அஸ்திவாரத்தை நாம தேர்ந்தெடுக்கணும். அந்தப் பெண் கெடுக்கப்பட்டது நந்தி ஹில்ஸிலே உள்ள பழைய பங்களா, இல்லேயா?

சிவரா: ஆமா, சார்.

வெங்க: இந்த நிகழ்ச்சி நடந்தபோது பார்த்தவங்க யாராவது இருக்காங்களா?

சிவரா: பார்த்த சாட்சி யாரும் இல்லே!

வெங்க: வாட்சுமேன் யாராவது இருந்திருப்பானே!

சிவரா: இல்லே. இது உபயோகத்தில இல்லாத பாழடைந்த பங்களா.

வெங்க: அப்போ முதல் பாய்ண்ட்டே அடிபட்டுப் போச்சு. டாக்டர் சர்ட்டிபிகேட்டும் இல்லேங்கிறீங்க.

சிவரா: இந்தப் பெண்ணுடைய வாக்கு மூலம்தான் சாட்சி.

வெங்க: நான் ஒப்புக் கொள்றேன்! ஆனா ஒரு கேஸை 'ப்ரூவ்' பண்ண மூணு அம்சம் தேவை. அந்தப் பெண்ணின் எண்ணத்துக்கு விரோதமா, அவ சம்மதம் இல்லாம அல்லது இணங்க மறுத்தால் சாக நேரிடும்கிற பயத்தை அவளுக்கு ஊட்டி சம்மதிக்க வச்சா அது 'ரேப்' ஆகும். இப்ப அந்தப் பெண்ணுக்குச் சம்மதமில்லேங்கிறதை நாம எப்படி ப்ரூவ் பண்ணப் போறோம்!

சிவரா: அந்தப் பெண் சம்மதிக்கலியே!

வெங்க: மிஸ்டர் சிவராமன்! அது உங்களுக்குத் தெரியும்; எனக்குத் தெரியும். சட்டத்துக்கு எப்படித் தெரியப்படுத்தப் போறோம்? அந்தப் பொண்ணு ஏழைப் பொண்ணுன்னு சொல்றீங்க. எதிரிகள் கோர்ட்டுல 'நாங்க பணம் கொடுத்தோம். அதனால அவ எங்க இச்சைக்கு இணங்கி வந்தா' அப்படீன்னு சொல்லிட்டா செக்ஷன் முந்நூற்றி எழுபத்தைந்து அடிபட்டுப் போகும். அந்தப் பெண்ணு மேலே போலீஸார் 'இம்மாரல் டிராஃபிக்'ன்னு கேசு போட ஏதுவாயிடும்.

சிவரா: அப்ப இதுக்கு என்ன சார் வழி?

வெங்க: ஐ ஆம் ஸோ ஸாரி மிஸ்டர் சிவராமன்! சரியான சாட்சி இல்லாம இந்தக் கேஸைப் ப்ரூவ் பண்ண முடியாது. நாம் தோற்றுத்தான் போவோம்.

சிவரா: அப்ப எதுக்கு சார், உங்க சட்டம்?

வெங்க: படிச்சவன் இப்படிக் கேட்கிறது வேடிக்கையாயிருக்கு. இந்தச் சட்டங்கள் வெங்கடாத்ரி போட்ட சட்டங்கள் இல்லே. நாட்டு மண்ணுல வேரூன்றின சட்டங்கள்.

சிவரா: ஓர் அபலைப் பெண்ணுக்கு நீதி கொடுக்காத சட்டத்தைத் திருத்த வேண்டாமா, சார்!

வெங்க: நீங்க ஓர் அபலைப் பெண்ணுக்கு நீதி தேடித் தர வந்திருக்கீங்களா இல்லே, சட்டத்தைத் திருத்த வந்திருக்கீங்களா? இன்றைக்கு உள்ள கிரிமினல் லாவுல கல்யாணிக்குப் பாதுகாப்பு இல்லேன்னு நான் சொல்லலாம். என்னுடைய — ஒரு வழக்கறிஞனுடைய வேலே அதோட முடிஞ்சு போச்சு. சட்டத்தைத் திருத்த வேண்டியது கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா நியமிக்கிற லா கமிஷனுடைய வேலே. அந்த லா கமிஷன்ல என்னே ஓர் உறுப்பினராப் போட்டா இதை மனசுல வைச்சுக்கிட்டு ஏதாவது சீர்திருத்தம் பண்ணலாம். காரண காரியங்களைக் கண்டு அநுபவ பூர்வமான, ஆக்க ரீதியான சட்டச் சீர்திருத்தம் செய்ய முயலலாம்.



யும் தொழுகை செய்கிறார்'' என்றார்.

''எப்படிக் கண்டுபிடித்தாய்?'' என்று கேட்டேன்.

''நெற்றியின் மேல் பகுதியில் நடுவே காய்த்திருக்கிறது பார் அவருக்கு. முழந்தாளிட்டு, நெற்றி தரையில் படும்படி தினமும் ஐந்து முறை தொழுகை செய்ததனால் ஏற்பட்ட தெய்வீக வடு அது'' என்றார் நண்பர். - ராமு

சிவரா: அப்படீன்னா இப்ப இருக்கிற சட்டத்திலே அயோக்கியர்களுக்குத் தண்டனை இல்லேன்னு சொல்றீங்களா?

வெங்க: நான் அப்படிச் சொல்லலே! மனிதன் யோக்கியனா இருந்தா சட்டம் தேவையில்லே. மனிதன் அயோக்கியனா இருந்தாச் சட்டம் இருந்தும் பிரயோசனமில்லே. அதை உடைச்சிடுவான். மனிதன் நல்லவனா மாறணும்கிறதுதான் சட்டத்தின் லட்சியம். ஆனா அதுக்காக ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு போலீசுக்காரரை வைக்க முடியாது! நம்ப நாட்டில இருபத்தைந்து கோடிக்கு மேலே போலீஸார் இருந்தால் ஒருவேளை அநியாயம் நடக்காமல் தடுக்கலாம்.

சிவரா: இந்தப் போக்குனாலே தனி மனிதன் தானே சட்டத்தைக் கையிலே எடுத்துக்கொள்ள வேண்டிய நிலைமை உருவாகாதா?

வெங்க: கண்டிப்பாக உருவாகும்! ஆனால் நாகரிகமடைஞ்ச ஒரு நாட்டிலே சமூகம் தான் சட்டத்தைக் கையில எடுக்கணும். தனி மனிதன் எடுக்கக் கூடாது. அநியாயத்தினாலே அவதியுறலாமே ஒழிய அநியாயமான முறையிலே சட்டத்தைத் தன் கையிலே எடுத்துக் கொள்ளப்படாது.

சிவரா: அநீதியை என்னால தாங்க முடியாது சார்; அந்தச் சக்தி எனக்கில்லே!

வெங்க: மிஸ்டர்! என்னுடைய ஐம்பது வருட வக்கீல் தொழில்ல நான் தெரிஞ்சுக்கிட்ட உண்மை ஒன்று உண்டு. அதை உங்களுக்குச் சொல்றேன். மனிதன் உண்டாக்கிற சட்டம் பயனளிக்கவில்லையானாலும் தெய்வ நீதி பொய்யாகாது. மூடநம்பிக்கை இல்லாத ஒரு மதம் தன்னலம் இல்லாத ஒரு தெய்வ பக்தி இந்த நாட்டில வேரூன்றினா, அதாவது தனிமனிதன் மனசுல அருள் நிறைஞ்சா இந்த நாடு உருப்படும். சட்டம் பாவத்தை உருவாக்கும். ஆனால் அறமோ அதை அகற்றும்.

சிவரா: உங்க அறத்தையும் தர்மத்தையும் இப்போ யார் கேட்டார்கள்? ஒரு பாவத்தைப் போக்குகிறேன் என்று பல பாவங்களைப் படைப்பதா சட்டம்?

(வெளியேறுகிறான்.) (தொடரும்)

# நல்லவனுக்கும் கெட்டவனுக்கும் கையெழுத்து வேண்டாம்!




**பரந்தாமன்**

இருபத்திரண்டு வருடங்களுக்கு முன் ரயிலில் ஓசிப் பயணம் செய்த சாமுவேல் என்பவர் மனம் வருந்தி 40 ரூபாய் கட்டணத்துக்கு வட்டி சேர்த்து ரூபாய் 100 ஆக ரயில்வே தலைமை அதிகாரிக்கு அனுப்பி வைத்தார் என்ற செய்தி தினப் பத்திரிகைகளில் வந்தது. இத்தகைய நேர்மையாளர்கள் பரவலாக வாழ்ந்த நாடுதான் நம்முடையது.

எனக்குத் தெரிந்த ஒருவர் அந்நாளில் ஒருவரிடம் வேலை பார்த்தார். அவரைச் சோதிப்பதற்காக அவரிடமிருந்து அவர் முதலாளி ஒரு தங்க சவரனை எடுத்து மறைத்து விட்டார். அதைக் காலப் போக்கில் திருப்பித் தர மறுத்து விட்டார். அந்த முதலாளியின் காலத்துக்குப் பின் பிள்ளைகள் தங்கள் குடும்பத்தில் ஏற்பட்டிருக்கிற சில கஷ்டங்களுக்காக ஒரு பிரபல ஜோதிடரிடம் நிவாரணம் தேடிச் சென்றார்கள். "உங்கள் தந்தை அவரிடம் வேலை செய்த ஒருவருக்குத் தர வேண்டிய பாக்கி நிற்கிறது. அந்த பாவம் உங்களைத் தொடருகிறது" என்று அவர் சொன்னார். முதலாளியின் புதல்வர்கள் இருவரும் தந்தையிடம் வேலை பார்த்தவர் குடும்பத்துக்குச் சென்று அவரது வாரிசுக்கு இன்றுள்ள பவுன் விலையை ஆளுக்குப் பாதியாகப் பங்கிட்டுத் தந்து தீர்த்தார்கள். அந்த நாளில் பவுன் விலை பதினாறு ரூபாய்தான்.

தமிழ்க் காவலர் கே.ஏ.பி. விசுவநாதன் அவர்களது தந்தையார் காலத்தில் வயலில் புகுந்து மேய்ந்ததற்காக ஒரு காளை மாட்டைப் பிடித்து வந்து ஊர் பஞ்சாயத்தில் விசாரித்து அந்தக் காளையை ஏலத்திற்கு விற்று அந்தப் பணத்தைப் பொது வகைக்குப் பயன்படுத்துவது என்று முடிவு செய்தார்கள். அந்த ரூபாய் 15 அவரது தந்தையாரிடம் வட்டிக்காகத் தரப்பட்டது. அவர் தந்தையார் காலம் கழிந்து, கே. ஏ. பி. அவர்களின் காலத்திலும் அப்படியே அது கணக்கில் வளர்ந்து கேட்பாரற்ற ஒரு தொகையாக, 4 அணா வட்டியில் 120 ரூபாயாக வளர்ந்திருந்தது. "ஊர் வகைப் பணத்தில் ரூ. 120 என் வசம் இருக்கிறது. அதை ஊரார் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று ஒரு துண்டுப் பிரசுரம் அச்சிட்டு வெளியிட்டார், திரு கே.ஏ.பி. யாரும் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொள்ள முன்வரவில்லை. அதன் பின் அவர் ஒரு சிலரைக் கலந்து கொண்டு அந்த ஊரில் இருந்த கோவிலுக்கு அந்தத் தொகைக்கு மின்சார விளக்குகள் அமைத்துக் கொடுத்தார்.

பாபு சித்தரஞ்சன் தாஸின் தந்தை, தமது பூர்வீக சொத்துக்களையெல்லாம் இழந்து பெரும் கடனில் மூழ்கி 'இன்சால்வென்ஸி' தரும் நிலைக்கு ஆளானார். ஸி. ஆர். தாஸ் சிரமப்பட்டுக் கல்வி கற்று வளர்ந்து பாரிஸ்டர் ஆகி ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிக்கத் தொடங்கியதும், முதல் காரியமாகக் காலமான தம் தந்தையாரின் கடன்காரர்கள் ஒவ்வொருவரையும் அழைத்து, அவர்களது பாக்கியை வட்டி சேர்த்துத் தீர்த்தார். அதன் காரணமாக நமது நாட்டில் நாணயத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது கிண்டலாக "நீ பெரிய ஸி. ஆர். தாஸோ?" என்று குறிப்பிடுவதுண்டு.

சமீபத்தில், பஸ்களில் டாக்ஸிகளில் வைத்து மறந்து சென்ற நகைகள் பர்ஸ்கள் இவைகளை உரியவர்களிடம் அதிகாரிகள் வழியாகத் திருப்பித் தந்து பரிசு பெற்றவர்களின் செய்திகள் அடிக்கடி வருவது மக்களிடையே நாணய உணர்ச்சி முற்றிலும் குறைந்து விடவில்லை என்பதையே காட்டுகிறது. ஹோட்டல் பில்களில் தவறுதலாகக் குறைவாகத் தொகைகள் போடும் போது அதைக் கவனித்து காஷ் கவுண்டரில் முழுத் தொகையும் தரக்கூடியவர்களும் இருக்கிறார்கள். பாங்கில் சில நேரங்களில் அதிக பணத்தைத் தவறுதலாகத் தரும் பொழுது அதைத் திரும்ப தரக் கூடியவர்களும் இல்லாமல் இல்லை. சட்டைப் பையில் இருக்கும் பணத்தோடு சலவைக்குத் துணியை தவறுதலாகப் போடுவதுண்டு. இந்த மாதிரி நேரங்களில் சலவைத் தொழிலாளி பைசா குறை

யாமல் நாணயமாகத் தொகையைத் திரும்பக் கொண்டு வந்து தரவும் செய்கிறார். இவர்களுக்காகத் தான் நாட்டில் மழை பெய்கிறது.

எனக்குத் தெரிந்த ஒருவர் அவரிடம் உள்ள ரஸாயனப் பொருளை இன்னொரு ஸ்தாபனத்திற்கு மொத்தமாகத் தருவதற்கு விலை ரூ. 14.50 என ரேட் குறிப்பிட்டிருந்தார். அதை டைப் செய்தவர் தவறுதலாக ரூ. 145.50 என டைப் செய்து விட்டார். இந்தக் கடிதம் அப்படியே தொழிற்சாலையில் ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பல்லாயிரக்கணக்கான தொகைக்கு ஆர்டரும் தந்து விட்டார்கள். கோட்டா கொடுத்தவர், தவற்றைக் கண்டு கொள்ளாமல் அமுக்குத்தனமாக இருந்து பல ஆயிரக் கணக்கான ரூபாயைச் சம்பாதித்தார். ஆனால் அவர் வாழ்க்கையில் சௌகரியமாக இல்லை. சில நாட்களில் அவருக்குப் பாரிச வாயு ஏற்பட்டு இரண்டு கால்களும் இயங்காமல் விழுந்து விட்டன.

இரண்டாவது மகா யுத்த காலத்தில் பெட்ரோலுக்குக் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மோட்டார் கார் உபயோகிப்பவர்களுக்கு ஒவ்வொரு மாதமும், இத்தனை என்று நிர்ணயித்துப் பெட்ரோல் கூப்பன்கள் தருவார்கள். இதற்குக் கறுப்பு மார்க்கெட்டில் அதிக விலை உண்டு. மாதக் கடைசியில் பயன்படுத்தப் படாத கூப்பன்கள் எல்லாம் திரும்பி அரசிடம் தர வேண்டும் என்பது சட்டம். ஆனால் அதை எல்லோரும் பெட்ரோல் நிலையங்களில் தந்து பணம் பெறவோ கணக்கில் வைத்துக் கொள்ளவோ செய்வார்கள். நேர்மைக்கும் திறமைக்கும் சான்றாக விளங்கிய சத்தியநேசன் என்ற ஒரு நீதிபதி இருந்தார். அவர் காருக்கு என்று பெறும் கூப்பன்களை மாத இறுதியில் உபயோகிப்பது போக மீதி இருப்பதைத் துண்டு துண்டாகக் கிழித்துப் போட்டு விடுவார். ஏன் இப்படிச் செய்கிறீர்கள் என்று கேட்ட பொழுது, ''பிறருக்குத் தருவதும் சரியில்லை. அதிகாரிகளும் கூப்பன்களை நியாயமாக வழங்குவதாகத் தெரியவில்லை. அநியாயத்தைத் தவிர்க்கவே இப்படிச் செய்கிறேன்'' என்றார்.

ஒரு படப்பிடிப்பின் திருமணக் காட்சியில் சீர்வரிசை வைப்பதற்காக ஏராளமான பாத்திரங்கள் தேவையாக இருந்தன. ஒரு பாத்திரக் கடையில் கேட்ட பொழுது அந்தக் கடைக்காரர் ''மொத்த பாத்திரங்களையும், தேவையானதைப் பொறுக்கி வையுங்கள். அதற்குள்ள பில் தொகையை டெபாசிட்டாகக் கட்டி விட்டுப் போங்கள். திரும்பிக் கொண்டு வந்து தரும் பொழுது சேதமில்லாமல் புதுமை குறையாமல் இருந்தால் டெபாசிட் தொகையை அப்படியே திருப்பித் தந்து விடுகிறேன். ரூபாய்க்கு இரண்டணா வைத்து வாடகை தந்து விடுங்கள்'' என்று சொன்னார். அப்படியே சுமார் 3000 ரூபாய் சாமான்களை எடுத்துச் சென்று வாபஸ் தரப்பட்டது. ஆனால் அந்த திருமணக் காட்சியை மறுபடியும் எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் படப்பிடிப்பில் ஏற்பட்டது. திரும்ப வந்து பாத்திரங்களையெல்லாம் அதே போல் தேடி எடுத்து வைத்த பொழுது முன் தந்து உதவிய மானேஜர் இல்லை. என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தபொழுது கடை முதலாளி வந்தார். விவரங்களைச் சொன்ன பொழுது ''செக்கும் வேண்டாம், பில்லும் வேண்டாம். எல்லாத்தையும் எடுத்துக் கொண்டு போங்க. அப்படியே திருப்பிக் கொண்டு வந்து கொடுத்து விட்டு, அதற்குரிய வாடகையையும் கொடுத்திடுங்க'' என்று சற்றும் எதிர்பாராத வகையில் ஆதரவு காட்டினார். 'இவ்வளவு நம்பிக்கையாகத் தருகிறீர்களே இதில் ஏதாவது மாறுதல்கள் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வீர்கள்?' என்று அவரிடம் கேட்ட பொழுது ''நல்லவனுக்கும் கையெழுத்து வேண்டாம். கெட்டவனுக்கும் கையெழுத்து வேண்டாம். நல்லவன் கையெழுத்து போடாவிட்டாலும், நல்லபடியாக நடந்து கொள்வான். கெட்டவன் கையெழுத்து போட்டாலும் கூடக் கெட்டபடியாகத்தான் நடப்பான்'' என்று ஓர் அனுபவ தத்துவத்தைத் தெரிவித்தார்.



# அருளும் உழைப்பும் இருந்தால்!

பள்ளி சென்று முறையாகப் படித்ததில்லை
பட்டதாரி ஆகிவிட்டேன் விந்தை கேளுங்கள்

எனைப்பெற்றோர் இளவயதில் மணமுடித்தார்.
இருகுழவிகள் ஈன்றெடுக்கும் பேறுபெற்றேன்
என்னருமைக் கணவர்நீங்கி இறையெய்தினர்
என்னசெய்வேன் சொத்துமில்லை படிப்புமில்லையே!

என்னருமைச் சோதரர்கள் உதவிசெய்தனர்
எட்டாம்வகுப்புத் தேர்வில்தனி மாணவியானேன்.
மாசிலாமணி முதலியாரின் உதவியினுலே
மெட்ரிகுலே ஷன்தேர்வில் வெற்றியும்கண்டேன்.

சீமாட்டி வெல்லிங்டன் கல்லூரியிலே
சிறப்பாக ஆதாரப் பயிற்சிபெற்றேன்
ஆரம்பப் பள்ளியிலே ஆசிரியையானேன்
ஆண்டுதோறும் தேர்வுகளை எழுதியும்வந்தேன்.

பிள்ளையுடன் பட்டம்பெற முயற்சிசெய்தேன்
பொருளாதாரம் இன்மையால் விட்டுவிட்டேன்.
பெண்ணுடனே படித்துமுடித்துப் பட்டமும்பெற்றேன்
போகவில்லை படிக்கும்ஆசை பாருமெனக்கு

இன்னும்பல சிறப்புக்கள் எனக்குஉண்டு
இயம்பிடுவேன் அலுக்காமல் கேட்பீரே
கவிதைபல எழுதியுள்ளேன் தெரிந்தவராயி
கருணைகாட்டிப் பிரசுரிப்பார் எவருமில்லையே

பலபொருள்கள் மேடைஏறி பேசிவருகிறேன்
புன்னைநிழல் கண்ணன்குழல் இசைத்துவருகிறேன்
நாற்பதைநான் தாண்டிவிட்டேன் நிச்சயமாக
நான்முழுதும் உழைத்திடுவேன் கச்சிதமாக.

ஐ.ஏ.எஸ். எழுதுதற்கு அனுமதிதந்தால்
அதையும்ஒருகை பார்த்திடுவேன் அச்சமில்லையே
முதுகலையில் பட்டம்பெற முயன்றுவருகிறேன்
முடித்திடுவேன் விரைவினிலே முனைப்பாய்நின்று

இமயமலை ஏறுதற்கு இசைவுதந்தால்
ஏறிடுவேன் மகிழ்ச்சியோடு தயக்கமில்லையே
நண்பர்பலர் எனைக்கண்டு பெருமைகொண்டார்
நடுவில்சிலர் நவிலத்தகா தீமைசெய்தார்.

புகைநடுவினில் தீவுணர்த்திய
பாரதிதன்னுல்
பகைநடுவினில் இறைகாணும்
பக்குவம்கண்டேன்
இறையுணர்வும் துணிவும்நல்ல
உழைப்புமிருந்தால்
இயலாதது உலகினிலே
ஏதுவுமில்லையே.

— சாவித்திரி



---

சமையலறை அலமாரிகளில் பழைய நியூஸ் பேப்பர்களைப் போட்டு அதன் மேல் டப்பாக்களை வைக்கிறோம். பேப்பருக்குப் பதில்பழைய பிளாஸ்டிக் விரிப்பு எதையாவது போட்டு வைத்தால் கரப்பான் பூச்சிகள் வராது!

— சரோஜா ராமச்சந்திரன்



எனக்குத் திருமணமான புதிது. நானும் என் கணவரும் கல்கத்தாவில் குடியிருந்தோம். என் கணவர் ஓர் உயர் அதிகாரி. எனவே அவருடைய அந்தஸ்துக்கு ஏற்ற ஒரு வட்டாரத்தில் குடியிருந்தோம். அந்த வட்டாரத்தில் எல்லோரும் வீட்டுடன் ஒரு வேலைக்காரனை வைத்திருந்தனர். இல்லத்தரசிகள் எப்பொழுதும் தங்களை அலங்கரித்துக் கொண்டு 'கொலுப் பொம்மை' போல் காட்சி அளித்தனர். நானோ சிறு வயதிலிருந்து எல்லா வேலைகளையும் செய்தவள். எனவே, அண்டை அயலாரின் போக்கு விசித்திர

மகளிர் பகுதி





⌘ சமீபத்தில் என் வீட்டில் ஒரு தையல் மெஷின் வாங்கினேம். அதில் ஓர் இடத்தில் '710' என்ற எண் பொறிக்கப்பட்டிருந்தது. ஏதோ ரெஜிஸ்டிரேஷன் நம்பராயிருக்கும் என நினைத்தால், நாலைந்து வெவ் வேறு இடங்களில் அதே '710' என்ற எண் காணப் பட்டது. அப்படியானாலும், Regd. No. என்றுகூட எழுதாமலா வெறுமனே நம்பரை மட்டும் போடு வார்கள்? ஒரே புதிராக இருந்தது.

ஒருநாள் தற்செயலாக என் தோழி ஒருத்தி அதைப் பார்த்துக் கொண்டிருந்த போது இது பற்றிக் கேட்டேன். உடனே அவள் கலகலவெனச் சிரித்து விட்டுச் சொன்னாள்: ''அடி அசடே! அது 710 இல்லேடி, தலைகீழாகப் பார் தெரியும். Oil: அதாவது, அந்தந்த இடங்களில் ஆயில் போட வேண்டுமென்று அர்த்தம்!''

⌘ எனது ஒரே குழந்தை: வயது இரண்டு. மிகவும் குறும்புக்காரி. என் கணவர் என்னைப் பெயர் சொல்லி அழைப்பதைப் பார்த்து விட்டு அவளும் அப்படியே அழைக்கிறாள்! ஒருநாள் என் கணவரிடம், ''என்னங்க, குழந்தை என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடுகிறாளே, கவனித்தீர்களா?'' என்று கேட்டதற்கு அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''பேர் சொல்ல ஒரு பிள்ளை வேண்டும் என்று அடிக்கடி சொல்வாயே, போதுமா?''

— ஷம்சுன்னிஸா



# மருந்து சாப்பிடும் போது!

○ சில மருந்துகளைச் சாப்பாட்டுக்கு முன்பும் சில மருந்துகளைச் சாப்பாட்டுக்குப் பிறகும் சாப்பிடச் சொல் கிறார்கள். இந்த விதிகளை நாம் சரியாகக் கடைப் பிடிக்காவிட்டால் மருந்துக்குப் பலனே இருக்காது!

○ இரும்புச் சத்துக்காக மருந்து சாப்பிடும்போது அதனுடன் முட்டை சாப்பிடக் கூடாது. அப்படி சாப்பிட்டால் நம் உடம்பு இரும்புச் சத்தைப் போதிய அளவு உறிஞ்சாது. — அனிதா ராமச்சந்திரன்

□ ரஷ்ய விஞ்ஞானிகள், ''எலெக்டிரானிக் பேபி மைண்டர்'' என்ற ஒரு கருவியைக் கண்டுபிடித் துள்ளார்கள். ஒரு சிகரெட் பாக்கெட் அளவே உள்ள இதைக் குழந்தைக்குக் கீழே போடும் நாப்கின் துணி மீது வைத்து விட வேண்டியதுதான். அத் துணியில் ஈரம் பட்டால் போதும், இக் கருவியி லிருந்து ''பீப், பீப்'' என்ற ஒலி குழந்தை அழு வதற்கு முன்னாலே கேட்கும். தாய் ஓடிப் போய்த் துணியை மாற்ற மிகவும் உதவுகிறதாம் இது!

□ சட்டைப் பித்தான்கள் கழன்று விட்டால் மறுபடி யும் அவைகளைப் பொருத்தும்போது இதைச் செய்து பாருங்கள்:

போதுமான நூலை எடுத்துக் கொண்டு மெழுகு வர்த்தியின் மீது நூலைத் தேய்த்துக் கொள்ளுங்கள். வலிவேற்றப்பட்ட இந்த நூலைக் கொண்டு பித்தா னைத் தைத்தால் வெகு நாட்களுக்குப் பித்தான்கள் உதிர்ந்து போகாமல் இருக்கும்.

- ராஜவேணி குப்புசாமி

மாக இருந்தது. எனினும் என் கணவருக்காக ஒரு வேலைக்காரனை அமர்த்திக் கொண்டேன். என் அதிர்ஷ்டம் அவன் வந்த சில தினங் களில் 'காய்ச்சல்' என்று போய்விட்டான். அப்பொழுது நவராத்திரி நெருங்கிக் கொண் டிருந்தது. ''தன் கையே தனக்குதவி'' என் றெண்ணி அவர் காரியாலயம் சென்றதும் வீட்டைச் சுத்தம் செய்யலானேன். ஒரு மணி நேரத்தில் ஒட்டடை அடித்து முடித்து விட்டேன். ஹாலில் மின் விசிறியைத் துடைத் துக் கொண்டிருந்தேன். 'டிரிங்...டிரிங்...' என்று அழைப்பு மணி ஒலிக்கவே, போய்க் கதவைத் திறந்தேன். வாசலில் ஐந்தாறு பையன்கள் நின்று கொண்டிருந்தனர். ''என்ன வேண்டும்?'' என்றேன். ''அருகிலிருக்கும் மைதானத்தில் துர்க்கா பூஜை நடக்கவிருக் கிறது. சந்தா வசூல் செய்கிறோம். 'மேம் சாஹிப்'பைக் கூப்பிடு'' என்றனர்.

இதைக் கேட்டு முதலில் அதிர்ந்து விட் டேன். பிறகு நிலைமையைப் புரிந்து கொண் டேன். தலையில் கட்டிய துணியிலும் உடலி லும் ஒட்டடை சரமாகத் தொங்கிக் கொண் டிருந்தது. சேலையை நான் இடுப்பில் செருகி யிருந்த முறையும் என்னை வேலைக்காரி என்றே பறைசாற்றிக் கொண்டிருந்தது. கொஞ்சம் நிதானித்துக் கொண்டு, ''மேம் சாஹிப் வீட்டில் இல்லை, வெளியில் போயிருக்கிறார்; நாளைக்கு வாருங்கள்'' எனக் கூறிக் கதவைத் தாளிட்டேன்.

பின்னால் இந்தச் சம்பவம் பற்றி யோசித்த போது, நாம்தான் மேம் சாஹிப் (எஜமானி) என்று கூறிக் கொள்ளத் தைரியமில்லாமல் கூச்சப்பட்டோமே என்று எண்ணி வருத்த மடைந்தேன். இனி அப்படித் தயங்கக் கூடாது என்று முடிவு செய்தேன். அதே சமயம் மற்ற பலரைப்போல் நாம் உழைப்ப தற்கு அஞ்சவில்லையல்லவா என்றும் ஆறுத லடைந்தேன்.

அமெரிக்கர்களை உடையிலும் வேறு பல விதங்களிலும் காப்பி யடிக்கும் நாம் ஏன் உழைப்பிலும் அவர்களைப் பின்பற்றக்கூடாது? வாழ்க்கையில் கொஞ்சம் வசதி ஏற்பட்டால் முதுகு சொறியக்கூட வேலைக்காரர்களை நாட வேண்டுமா என்ன?

ராதா விஸ்வநாதன்








மேரி கடையில் உட்கார்ந்து வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தவள், தெருவில் ஆட்டோ ரிக்ஷா வந்து நிற்பதைக் கவனித்தாள். ரிக்ஷாவிலிருந்து இறங்கிய நபரைக் கண்ணுற்றவள் ஒரு கணம் அயர்ந்து விட்டாள். 'பார்த்தசாரதியா?'

அன்று காலையே அந்த வீட்டு மாடியில் குடியிருக்கும் மாணிக்கம், வீட்டின் சொந்தக்காரர் பெங்களூரிலிருந்து வரப் போவதாக அறிவித்திருந்தார். ஆனல் வீட்டின் சொந்தக்காரர் யாரோ என்று எண்ணியிருந்த மேரிக்குப் பார்த்தசாரதியைக் கண்ணுற்றதும் அதிர்ச்சி! ஏன்? பார்த்தசாரதியுமே மேரியைக் கண்டதும் ஒரு கணம் பிரமித்துத் தான் போனுன். 'மேரியா கடை வைத்திருக்கிருள்!'

சரக்கு வாங்கி வரக் கடைத் தெருவுக்குச் சென்றிருந்த டேவிட் ஒரு மணி நேரம் கழித்துத்தான் திரும்பி வந்தான். "அம்மா! இந்த வீட்டுச் சொந்தக்காரர் ஊரிலிருந்து வந்திருக்கிறாரமே, பார்த்தியா?" என்று கேட்டான். பழைய நினைவில் நீந்திய மேரி 'உம்' கொட்டியதோடு சரி; அதிலேயே ஆழ்ந்து போனுள்.

வேலூரில் அவள் தன் அண்ணன் அந்தோணியோடு திருமணமாகாக் கன்னியாகக் குடியிருந்த காலத்தில் பார்த்தசாரதி எதிர் வீட்டில் வசித்து வந்தான். ஒரு கண்டிராக்டராக வேலை பார்த்த அவன் ஒரு மைனர் போல நடந்து கொண்டான். சாதாரணப் பெண்களையே வைத்த கண் வாங்காமல் பார்க்கும் இயல்புடைய பார்த்தசாரதி கிளி போன்ற மேரியைக் கண்டதும் சும்மா இருப்பானு?

பார்த்தசாரதி மெல்ல மேரியின் அண்ணன் அந்தோணியுடன் நட்புக் கொண்டான். அவன் வீட்டில் இல்லாத சமயங்களில் அவனைத் தேடி வருபவன் போல் வந்தான். மேரி சூட்சம புத்தி படைத்தவளானபடியால், பார்த்தசாரதியின் கபட எண்ணத்தைச் சடுதியில் புரிந்து கொண்டதோடு, தன் அண்ணனிடமும் அவனுக்கு அதிக இடம் கொடுக்காதே என்றுள். ஒரு சமயம் வெளியூர் சென்ற அந்தோணி திரும்பி வர ஒரு வாரம் பிடித்தது. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு நாள் இரவு பார்த்தசாரதி மேரியை நாடி வந்தான்.

அவன் தீய நோக்கத்தைப் புரிந்துகொண்ட மேரி, "நீயா? எங்கே வந்தே?" என்று சீறினுள்.

"இதோ பார், மேரி! நீ மணமாகாதவள். நானும் மணமாகாதவன். உன்னை நான் மணக்கச் சம்மதிக்கிறேன். நான் மாதம் சுமார் முந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறேன். நீ என்னுடன் சுகமாக வாழலாம்" என்று குழைந்த பார்த்தசாரதியைச் சீற்றத்துடன் நோக்கினுள்.

"இது என்ன பேச்சு? நானும் நீயும் வெவ்வேறு மதம். இது நடக்காத பேச்சு. தயவுசெய்து போய்விடு" என்று கூறினுள் மேரி.

"மதமாவது மண்ணுங்கட்டியாவது! இது பத்தாம் பசலிப் பேச்சு. எனக்கு இதில் நம்பிக்கை கிடையாது" என்றுன் பார்த்தசாரதி.

"மரியாதையாகப் போய்விடு. இல்லாவிட்டால் கூச்சல் போட்டு உன் மானத்தை வாங்கி விடுவேன்!" என்று ஆத்திரத்துடன் கூறினுள் மேரி.

சத்தம் கேட்டு அடுத்த வீட்டுக் கிழவி எழுந்து வரவே, மேரி தப்பினுள். சந்தடி செய்யாமல் பார்த்தசாரதி அவ்விடத்தை விட்டு நடையைக் கட்டினுன்.

அந்தோணி திரும்பி வந்ததும் மேரி அவனிடம் நடந்ததைக் கூறி முதலில் தன் திருமணத்தை முடிக்குமாறு வேண்டினுள்.

அடுத்த மாதமே மேரிக்கும் தேவசகாயத்துக்கும் திருமணம் நடந்தது. தேவசகாயத்துக்கு ஜெனரல் ஆஸ்பத்திரியில் வேலை கிடைக்கவே, இருவரும் சென்னை வந்தனர்.

இரண்டு வருஷத் தாம்பத்திய வாழ்க்கை மேரியை ஓர் ஆண் குழந்தைக்குத் தாயாக்கியது. டேவிட் என்று பெயர் சூட்டிக் குழந்தையை அன்புடன் வளர்த்தார்கள். உரிய பருவத்தில் பள்ளியில் சேர்த்தார்கள். டேவிட் ஏழாவது வகுப்புப் படித்துக்கொண்டிருந்த சமயம் மேரிக்குப் பேரிடி ஏற்பட்டது. கணவன் தேவசகாயம் திடீரென்று காலமாகி

விட்டான். பாவம், மேரி! என்ன செய்வாள்! மனுைடைத்துடன் தன் ஒரே மைந்தன் டேவிட் டின் எதிர் காலத்தைக் கருதி, துயரத்தைத் தாங்கிக் கொண்டாள். கணவனின் மரணத் துக்குப் பின் அவளுக்குக் கிடைத்த சேமிப்புத் தொகையான இரண்டாயிரத்துச் சொத் சத்தை மூலதனமாகக்கொண்டு சிறியதொரு பெட்டிக் கடை வைத்தாள். சோடா, கலர் மிட்டாய், பிஸ்கோத்து, பலபம், சிலேட், பென்சில் முதலிய சில்லறைப் பொருள்கள். வருமானம் சொற்பம்தான் என்றாலும் மான மாகப் பிழைத்து வந்தாள்.

தான் கடை வைத்திருக்கும் இடத்தின் சொந்தக்காரன் பார்த்தசாரதி என்று அறிந்த தும் மேரியின் மனம் என்னுடைதை வெல்லாம் எண்ணி வேதனை அடைந்தது. அவள் ஐயுற்றதற்கு ஏற்றாற்போல் கடையில் டேவிட் இல்லாத சமயம் பின்புறம் நிழலாடுவது கண்டு திரும்பினாள். பார்த்தசாரதி நின்று கொண்டிருந் தான். அவளுக்குப் பகீரென்றது.





''மேரி, நீதான் இங்கு இருக்கிறாயா?'' என்றான் அவன்.

ஏதாவது பதில் சொல்லியாக வேண்டுமே என்று ''அ...ஆமாம்! இது உங்க வீடுதானா?'' என்று கேட்டாள்.

''பாவம்! உன் புருஷன் இறந்து விட் டானாமே! கேள்விப்பட்டேன்!''

மேரி விசும்பினாள்.

''தெய்வமே உன்னை என் வீட்டில் கொண்டு சேர்த்திருக்கிறது, பார்த்தாயா?'' மேரியை நோக்கி மெல்லச் சிரித்தான் பார்த்தசாரதி. ''நீ விதவையானால் என்ன? பரவாயில்லை மேரி. இன்று நான் இரண்டு லட்சத்துக்கு மதிப்புள்ளவன்!'' அவன் குரலில் பெரு மிதம் தொனித்தது.

''இருக்கலாம். ஆனால் தாறுமாறாய்ப் பேசி வீணாக அவமானம் அடையாதீங்க!'' தீயென வார்த்தையைக் கக்கினாள் மேரி.

''என்ன சொல்லறே? நானா அவமானப் படுவேன்? உன்னை அவமானப்பட வைப் பேன்!'' உறுமிவிட்டுப் பார்த்தசாரதி போய் விட்டான்.

தாயின் முகம் பீதியடைந்திருப்பதை வெளியிலிருந்து திரும்பிய டேவிட் கவ னித்தான். ''அம்மா! ஏன் ஒரு மாதிரியாய் இருக்கே! உடம்புக்கு ஏதாவது....?'' என்று கேட்டான். சற்று முன்பு நடந்தது ஒரு தாய் தன் மகனிடம் கூறக் கூடிய செய்தியா? அதை மறைத்து, ''மகனே! நாம் இந்த இடத்தை விட்டு வேறு இடம் போவதுதான் நல்லது!'' என்றாள்.

''இந்த இடத்துக்கு என்ன குறை? எல்லா வற்றுக்கும் வசதியா யிருக்கே! நல்ல வியா பாரமும் ஆவுதே!'' என்றான் மகன்.

நல்ல வேளை! கடையில் மிட்டாய் வாங்க வந்த குழந்தைகள் பதில் சொல்ல வேண்டிய இக்கட்டிலிருந்து அவளைத் தப்புவித்தனர்.

அன்று மாலை.

''அம்மா! உன்னை வீட்டுக்காரருக்கு முன்பே தெரியுமாமே!'' என்று கேட்டபடியே புறக் கடையிலிருந்து வந்தான் டேவிட். அவன் முகம் கடுமையாக இருந்தது.

துணுக்குற்ற மேரி, ''ஆமாம் டேவிட்! வேலூரில் இருந்தபோது எதிர் வீட்டில் இருந் தார்'' என்றாள்.

''அவர் உன்னை மணந்து கொள்ள ஆசைப் பட்டாராம். நீகூட....!''

''நான்கூட...?''

''விருப்பம் தெரிவித்தாயாம். ஆனால் உன் அண்ணன் அந்தோணிதான் தேவசகாயத் துக்கு உன்னை மணம் செய்து வைத்து விட்டாராம்!''

''அடப் பாவி! அப்படியா சொன்னான்?'' துடித்துப் போய்விட்டாள் மேரி.

''இன்னும் ஒன்றும் சொன்னான் அம்மா!''

''என்ன?''

''என்னைப்பெற்றஅப்பன்அவன் தானாமே!''

''ஆ!'' அலறிவிட்டாள் மேரி.

மகன் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''டேவிட்! நீ அதை நம்பாதே! அந்தப் பாவி கூறியது அத்தனையும் அபாண்டம். உன் தாய் தூய்மையானவள். அவளைச் சந்தேகிக்காதே!'' என்று கதறினாள்.

''அம்மா! நான் ஒன்றும் முட்டாள் இல்லை. நான் சின்னப் பையன்தான். இருந்தாலும் நல்லது கெட்டது எனக்குத் தெரியும்.''

மேரி உண்மையிலேயே நடுங்கி விட்டாள். அன்று காலை பார்த்தசாரதி கூறிவிட்டுச் சென்றது அவளுக்கு எப்படி மறக்கும்? 'மேரி! உன்னை அவமானப்பட வைப்பேன்!' அவ னுடைய இச்சைக்கு இணங்க மறுத்ததற் காகப் பழி வாங்கும் எண்ணத்துடன் இப்படிக் கயிறு திரித்திருக்கிறான் கயவன்!

''அம்மா! நீ ஏன் இதற்காகக் கண்ணீர் வடிக்கிறாய்? நீ மகா உத்தமி என்பது எனக்குத் தெரியாதா? நீ என்னைப் பார்த்து எத்தனை தடவை நான் அப்படியே அப்பனை உரித்து வைத்திருக்கிறேன் என்று கூறிப் பெருமைப் பட்டிருக்கிறாய்! அது மட்டுமா? போன வருஷம் நான் கடுமையான விஷ சுரத்தினால் ஆஸ் பத்திரியில் சேர்க்கப்பட்டு, உயிருக்கு மன் றாடிக் கொண்டிருந்தபோது, நீ என் பக்கத் திலே உட்கார்ந்து கண்ணீரைப் பெருக்கிக் கொண்டே, ''ஏசுவே! நான் என் கண வனைத் தெய்வம் என்று எண்ணி அவரையே போற்றி வந்திருப்பது நிசமானால், நீதான் என் மகனுக்கு உயிர்ப் பிச்சை அளித்துக் காக்க வேண்டும்!'' என்று வேண்டவில் லையா? நானும் நல்லபடியாகப் பிழைத் தெழுந்தேனே! நீ மகா உத்தமி என்பதற்கு இதை விட வேறு என்ன ஆதாரம் வேண் டும்? உன்மீது இப்படி அவதூறு பேசின அந்த மனிதனை என்ன பண்ணினேன், தெரி யுமா? 'டேய்! எங்கம்மா உத்தமியடா! உன் கட்டுக்கதை என்னிடம் பலிக்காது!' என்று கூறி அவன் முகத்திலே காறி உமிழ்ந்து விட்டு வந்தேன். மாடியில் இருக்கும் மாணிக்க ஐயா இதற்குச் சாட்சி! நீ வேறு இடம் பார்க்கச் சொன்னதன் காரணம் எனக்கு இப்பொழுது புரியுது அம்மா! இதோ இப்போதே புறப்பட்டுச் சென்று வேறு ஓர் இடம் தேடிப் பார்க்கிறேன். நீ கவலைப் படாதே. அம்மா! உன் மகன் டேவிட் நான் இருக்கும்போது நீ ஏன் பயப்படுகிறாய்?'' என்று கூறி எழுந்தான். தாயுள்ளம் பெரு மையால் பூரித்தது. அவனை அப்படியே அணைத்துக் கொண்டாள் மேரி.




★ பிணங்களுக்குத் தூக்குத் தண்டனை விதித்துத் தூக்கிலிட்ட அதிசய சம்பவம் இங்கிலாந்தில் நடந்தது. .1649-ம் ஆண்டு ஜனவரி 30 ம் நாள் இங்கிலாந்து மன்னர் சார்லஸின் தலையை வெட்டினார்கள். மக்க ளின் உரிமைகளை மதிக்காத சார்லஸ் மாண்டபின் கிராம்வெல் தலைவராகி நாட்டை ஆண்டார். கிராம் வெல் காலத்துக்குப் பிறகு வரலாறு திரும்பியது. இங்கிலாந்தில் மறுபடியும் முடியாட்சி ஏற்பட்டது. சார்லஸ் மன்னரின் மகன் இரண்டாம் சார்லஸ் ஆட்சிக்கு வந்தார்.

இரண்டாம் சார்லஸ் தம் தந்தையைக் கொன்ற வர்களைப் பழி வாங்கத் தீர்மானித்தார். ஆனால் கிராம்வெல்லும் அவரது நண்பர்களும் அப்பொழுது உயிரோடு இல்லை. இருந்தாலும் அவர்களைத் தண்டிக்க மன்னர் முடிவு செய்தார். வெஸ்ட் மினிஸ்டர் திருக்கோயிலிலிருந்து கிராம்வெல், அயர்ட்டன், பிராட்ஷா, பிரைட் ஆகியோர்களின் பிணங்களைத் தோண்டி எடுத்து டைபர்ன் (Tyburn) என்னுமிடத்தில் தூக்குப் போட்டனர். தூக்குப் போடப்பட்ட பிணங்களின் தலைகளை வெட்டி மக்க ளின் பார்வைக்கும் வைத்தனர்.

இதைப் போன்ற நிகழ்ச்சி வரலாற்றில் வேறு எங்கும் நடைபெறவில்லை.

★ இங்கிலாந்தில் ''விக்கு'', ''டோரி'' கட்சிகள் என இரண்டு கட்சிகள், ஒன்று அரசரை ஆதரித்தது; மற்றொன்று அரசரை எதிர்த்தது. அரசரை ஆதரித் துப் பாராளுமன்றத்தை வெறுத்தவர்களை அவர்க ளது எதிரிகள் ''டோரிகள்'' என்று கூறினர். அயர் லாந்தில் கலகங்கள் செய்து கொலை கொள்ளை களில் ஈடுபட்டுக் கொண்டும் இருந்த கத்தோலிக் கரின் பெயரே ''டோரிகள்'' என்பது.

.அரசரை எதிர்த்தவர்களை அரசரின் ஆதரவா ளர்கள் ''விக்குகள்'' என்று பெயரிட்டுக் கேலி செய்தனர். விக்குகள் என்ற பெயர் ஸ்காட்லாந்தில் கலகம் விளைத்த பிரஸ்பிடீரியர்களைக் குறிக்கும்.

கொள்ளைக்காரர்களின் பெயரும் கலகக்காரர்களின் பெயரும் நாளடைவில் இரு கட்சிக்காரர்களின் பெயர் களாக நிலைத்து விட்டன.

★ சார்லஸ் மன்னரைக் கிண்டல் செய்ய நினைத்த அவரது நண்பர், ''உங்கள் கல்லறையில் இப்படி ஒரு வாசகத்தை எழுத வேண்டும்'' என்று கீழ்க் கண்டதை எழுதிக் கொடுத்தார்:-

''இதோ இங்குதான் எங்கள் மன்னர் படுத் திருக்கின்றார்.
அவரது சொற்களை நம்புவார் எவரும் இல்லை;
அவர் அறிவற்ற சொற்களைச் சொன்னதே இல்லை;
அவர் அறிவுள்ள எதையும் என்றும் செய்ததே இல்லை.''

.இதைப் படித்த மன்னர் உடனே, ''சரிதான், இப்படியே எழுதலாம். நான் பேசுபவை மட்டும் தான் என்னுடையவை. ஆனால் நான் செய்யும் செயல்கள் என்னுடைய மந்திரிகள், நண்பர்களுடைய வைதாமே'' என்றார். நண்பர் பதிலே பேசவில்லை.

-மா.பா. குருசாமி

# படித்தோம் சொல்கிறோம்



கண்ணதாசன்

## கண்ணதாசன் கவிதைகள் (ஆறும் தொகுதி)

**க**விதை என்று சொன்னதுமே இன்று ஆயிரமாயிரம் தமிழர்கள் உடனே கண்ண தாசனை எண்ணுகின்றனர். அந்த அளவுக்கு அவர் பிரபலமடையத் திரைப்படம் துணை புரிந்திருக்கிறது என்பதை மறுக்க முடியாது. ஆனால் கண்ணதாசன் திரைப்படத்தின் பிரா பல்யத்தில் மட்டும் குளிர் காயவில்லை.

கண்ணதாசனின் கவிதா சக்தி அவரது கற்பனை வளத்தை அஸ்திவாரமாகக் கொண் டது. அந்தக் கற்பனை ஊற்றுக்குச் சொல் லாட்சித் திறனென்னும் கரை எடுப்பித்துப் பாய்ச்சிக் கவிதைப் பூங்காவைக் கண்ணதாசன் மலர்விக்கும் அழகை இதோ பாருங்கள்.

வன்முறைக் கூட்டமே! வன்முறைக் கூட்டமே!<br>
வளரும் என் பூமியை வதைக்கவா தோன்றினீர்?<br>
விடு வேண்டும் என்று வீட்டையே கொளுத்தினீர்!<br>
நாடு வேண்டும் என்று நாட்டையே போக்கினீர்!<br>
காய்ந்ததோர் எலும்பினைக் கடிக்கின்ற குக்கலின்<br>
பல்லிடை வரும் ரத்தம் பசி தீர்க்க உதவுமோ?<br>
அங்குலக் கணக்கிலே வளர்ந்ததோர் அழகினை<br>
அடியடியாகநீர் அழிப்பதே 'கொள்கை'யோ?<br>
எத்தனை காலமாய் ஏற்றிய விளக்கினைப்<br>
பித்தனைப் போல நீர் அணைப்பதே பெருமையோ?<br>
தன்முறை நியாயங்கள் தர்மங்கள் எதனையும்<br>
வன்முறை வழங்குமோ, வழிமுறை இல்லையோ?<br>
பாரதப் புதல்வரே! பைந்தமிழ்ப் பிள்ளைநான்<br>
கால்களில் வணங்கினேன்; கத்தியும் புத்தியும்<br>
வேறுவேறாம் வரை வீட்டுக்கு வாழ்வில்லை!

இதுபோன்று பல்வேறு நேரங்களில் பல் வேறு மன நிலைகளில் எழுதப்பட்ட கவிதைகள் இத் தொகுதியில் உள்ளன. எல். ஐ. ஸி. கட்டிடம் எரிந்த சம்பவம் இன்று பழைய செய்தி. ஆனால் அதுபற்றிய கண்ணதாசனின் கவிதை இன்றைக்குப் படிக்கும் போதும் மனத்தைத் தொடுவதற்குக் காரணம் அவரது கற்பனை வளம்தான். அதனை முந்நூறு பக்கங் களில் குறைவின்றிக் காண்கிறோம். **- கி. ரா.**

பிரசுரம்: வானதிபதிப்பகம், சென்னை-600017 விலை ரூ. 9-.

## ஸ்வப்ந புஷ்பங்கள்

**இ**ந்நூலுக்கு முன்னுரையாக ''தெறிப்பு'' என்ற தலைப்பில் காணப்படும் சில வரிகள்:

''புதிதாய்ச் சாதிக்கும் பகிரண்டப் பிர யத்தனங்கள் ஏதுமில்லை; கலாபூர்வமாய், ரூப முழுமை கதைகளில் வந்துள்ளதா... கவலையுமில்லை.

பொங்கலுக்கு முந்தின நாள் ராத்திரி முன் வாசல் முற்றத்தில் மாக்கோலம் போட் டுக் கோணலாய்ச் செம்மண் கோடிழுக்கிற அம்மாக்களிலது போல் எங்கள் கோணல் கோடுகளில் உணர்வுகள் ஸத்யமானவை; நம் பிக்கைகள் நிச்சயமானவை.''

இந்த வரிகளிலிருந்து உங்களுக்கு ஏதாவது விளங்கினால் சரி. பத்துப் பேர்கள் எழுதிய சிறுகதைகள் இந்நூலில் இருக்கின்றன. அவற் றுள் சட்டென்று புரிகிற, மனத்தில் இடம் பெறுகிற சில சிறுகதைகளுள் ஏ. ஏ. எச். கே. கோரி எழுதிய ''ஒலிம்பிக்ஸ் 1980'' என்ற சிறுகதை ஒன்று. சம்பத்தும், சேக ரும் அத்யந்த நண்பர்கள். சம்பத்து கெட்டிக் காரன்; விளையாட்டு வீரன். சேகர், ஒன்றும் தெரியாத அப்பாவி. பிறரை உற்சாகப் படுத்துவதாக நினைத்துக் கொண்டு எதைத் தையாவது அசம்பாவிதமாக உளறி வைப் பான். சம்பத்து அவனை அவ்வப்போது எச் சரிப்பான். இவ்வளவுதான் கதையின் கரு. இதை வைத்துக் கொண்டு கதையை அற் புதமாய்ப் பின்னிப் படிப்பவர்களைக் கண் கலங்க வைத்து விட்டார், ஆசிரியர்.

எஸ். கலைமணியின் ''ஒரு காதல் கதையின் முடிவுரை'' மனோதர்மத்தை எடுத்துக் காட் டும் சிறுகதை. — அப்படிச் சொல்லுவதை விட, நுரைப் பாலின் தெறிப்பு, அல்லது ஒரு சொட்டுத் தேன் என்று சொல்லுவது பொருந்தும். ப்ரேம் எழுதிய ''ஞானோ தயம்'' ஒரு சின்ன நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு ஒரு பெரிய மனப் போராட்டத்தை அநாயாசமாகச் சித்திரிக்கிறது. புரிந்ததைப் பாராட்டிப் புரியாததை விட்டு விடுவோம்!

**— லோமாஸ்**

கிடைக்குமிடம்: ஸ்ரீமதி எஸ். விஜய லட்சுமி, 26, பெருமாள் கிழக்குத் தேரடித் தெரு, பாளையங்கோட்டை, திருநெல்வேலி—627002. விலை: ரூ. 4.

## கவிதை பிறந்த கதை

**சி**ல ஆண்டுகளுக்கு முன் பி.வி. கிரி கவிதை பிறந்த கதை என்ற தலைப்பில் கல்கியில் ஒரு தொடர் எழுதி வந்தார். பல்வேறு கவிஞர்களைச் சந்தித்து அவர்களது ஒரு கவிதை



ஸ்வப்பன புஷ்பங்கள் மேலட்டை



பி. வி. கிரி



துளசிதாஸர்

பிறந்த சுவாரசியமான சூழ்நிலை சந்தர்ப்பத்தைக் கேட்டறிந்து எழுதி வந்தார்.

இந்தக் கட்டுரைகளைத் தொகுத்துப் புத்தகமாக்கியபோது மேலும் பல கவிஞர்களையும் சந்தித்து நூலுக்கு முழு வடிவம் தந்திருக்கிறார் கிரி. காலமான பிரபல கவிஞர்கள் பலரது கவிதைகள் பிறந்த கதையும் சேர்த்திருப்பது பாராட்டுக்குரியது. பாரதியார் கவிதை ஒன்று பிறந்த கதையை அவரது அருமை மகள் சகுந்தலா பாரதியே கூறியுள்ளார். இப்படிப் பலரும் ஒத்துழைத்து ஒரு நல்ல நூல் உருவாக உழி உருத்துள்ளார்கள்.

பி. வி. கிரி எழுதும்போது எளிய நடையைக் கையாள்கிறார். சொற் செட்டும் இருக்கிறது. தம்மை அதிகம் காண்பித்துக்கொள்ளாமல் கவிஞர்களையே பேச வைக்கிறார். கவிதை பிறந்த கதையை அனுமார் வாலாக நீட்டாமல் சட்டென்று கவிதைக்கு வந்து விடுகிறார். கவிதையை அனுபவிக்க அது பிறந்த சந்தர்ப்பச் சூழலை அறிவது துணை செய்கிறது. கவிஞனைப் புரிந்து கொண்டு கவிதையை ரசிப்பதில் உள்ள இன்பமே அலாதிதான்.

கவிதைகள் பிறக்கும் சூழ்நிலைகளில்தான் எத்தனை வித்தியாசங்கள்? பிச்சைக்காரியைப் பார்க்கும்போது, கடல் அலைகளை நோக்கும்போது, வளைந்து வளைந்து செல்லும் வாய்க்கால்களைக் காணும்போது, பழைய காதலி நீண்ட இடைவெளிக்குப் பின் கண்ணில் எதேச்சையாகத் தட்டுப்படும்போது, தகப்பனாரிடம் திட்டு வாங்கும்போது-என்று இப்படி கவிதை பிறக்கும் சந்தர்ப்பங்களே நம்மைத் திக்குமுக்காடச் செய்து விடுகின்றன என்றால் கவிதைகளைச் சுவைக்கக் கேட்பானேன்!

மிக நேர்த்தியாக அச்சாகியுள்ள இந்த நூலில் கவிஞர்களை அகர வரிசைப்படுத்தி விட்டார் கிரி, சாமர்த்தியமாக. ஆனால் வாசகன் தனக்குப் பிடித்தமான கவிஞர்களைத்தான் முதலில் தேடுவான். அதனால் என்ன, பிடிக்காத கவிதையை அவன் இதில் காணப் போவதில்லையே! **—குட்டி கிருஷ்ணன்**

பிரசுரம்: கிறிஸ்துவ இலக்கிய சங்கம், தபால் பெட்டி 501, சென்னை-600003. விலை ரூ. 7.00.

## துளசிதாசரும் அவரது அருள்வாக்கும்

**நா**னூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய துளசிதாஸர் தமது ராமாயணத்துக்கு ''இராம சரித மானஸம்'' என்றே பெயர் சூட்டி ராம பக்திக்கு வித்திட்டு அதனை ஆலெனத் தழைக்கவும் வைத்திருக்கிறார்.

அவர் இயற்றிய ராம சரித மானஸம் பண்டிதர்களின் மொழியான சம்ஸ்கிருதத்தில் இல்லாமல் பாமரர்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தில் 'அவதி' என்னும் மொழியில் எழுதப்பெற்றதாகும். மொழிச் சிறப்போடு கருத்துச் செறிவும் கொண்டு, கவி நயத்தோடு பக்தி ரஸமும் பெருக்கெடுத்தோடப் புனையப்பட்டிருப்பதால், இதனைப் பாமர மக்கள் முதல் பண்டிதர்கள் வரை 'வேத கீதை' யென்றே போற்றுகின்றனர்.

அவருடைய பிறப்பும், வளர்ப்பும் வாழ்க்கையுமே ஒரு கதை. இரத்னாவளி என்பவளை மணந்து, அவளிடம் அவர் உயிரையே வைத்திருந்தார். 'எலும்பு தோல் போர்த்த என் உடம்பில் வைக்கும் ஆசையை ஸ்ரீ ராமனது பேரில் வைத்தால், பிறவிப் பிணியிலிருந்தே கடைத்தேறி விடலாமே!' என்று அவள் கொடுத்த சொடுக்கே அவரை இராம பக்தர் ஆக்கியது.

எல்லாவற்றையும் டாக்டர் ரத்னாகர் பாண்டேய் ரத்னச் சுருக்கமாய்க் கூறியுள்ளார். அதைத் தமிழாக்கித் தந்துள்ள திரு டி. ராஜகோபாலனே சிறப்பான இலக்கியத் தமிழில் தம் பணி சிறக்கத் தந்துள்ளார். துளஸி தாஸர் என்று எழுதாமல் துளஸி தாஸராகத் தமிழ் மரபாக்கித் தந்துள்ளவர் ரத்னாவளியை இரத்னாவளியாக்கித் தமிழுக்கு ஏனோ ஒரு புதிய மரபையும் தோற்றுவித்திருக்கிறார்!

**'' பெறலரும் கவிதை புனைந்த நற்றுளசி பெறவில்லை பலனணி பெற்றது கவிதையே''**
என்பதில் ஐயமில்லை. அவர் பற்றிய உயரிய இந்த நூலின் விலையும் அல்லவோ பதினேழு ரூபாயாக உயர்ந்திருக்கிறது! —ரா. வீ.

கிடைக்குமிடம்: வி. என். மாதவன், 54, பார்க்கிட் ரோடு, தியாகராயநகர், சென்னை-17.

# சேரமான் காதலி

அத்தியாயம் 10

## கடவுள் அமைத்த மேடை

சேரமான் அலையை எதிர்க்கச் சக்தியற்றவரானார்.

கால் கைகள் தளர்ந்து விட்ட நிலை.

அலையோ அவரை உட்புறமாகவே தள்ளிக் கொண்டு சென்றது.

பாதி மங்கிய நிலையில், தான் ஒரு மணற் பரப்பில் தள்ளப்படுவதை அவர் உணர்ந்தார்.

அது ஒரு சின்னஞ்சிறிய தீவு; அராபிக் கடலில் உள்ள நூற்றுக்கணக்கான தீவுகளில் ஒன்று.

எழுந்து நிற்கவும் சக்தியற்ற நிலையில் தள்ளாடியபடியே வலது கையை மணலில் ஊன்றி அவர் அமர்ந்தார்.

சுற்றுமுற்றும் பார்த்தார்.

ஆங்காங்கு சில தாழம்புதர்கள்; பறிப்பார் இல்லாமல் வளர்ந்து கிடந்த பனை, தென்னை மரங்கள்; நிலவொளியில் பயமின்றி ஓடி விளையாடிக்கொண்டிருந்த சிறிய விலங்கினங்கள்,—

—சுமார் முந்நூறு காணிப் பரப்பளவு இருக்கும் அந்தத் தீவு.

கடலில் மூழ்கிவிட்ட அந்தப் பெண்களுக்காக அவர் கண் கலங்கினார்.

தமது குடிமக்களில் இருவரைத் தம்மால் காப்பாற்ற முடியாமல் போனது பற்றிக் கவலைப்பட்டார்.

'ஆளரவம் இல்லாத ஒரு தீவுக்குத் தான் வந்து விட்டோமோ' என்ற கவலை அவருக்கு இல்லை.

ஒரு போர்வீரன் இவற்றையெல்லாம் எதிர்நோக்க வேண்டியவனே.

கடலிலேயே நீண்ட நேரம் நீந்தியதால் அவருக்குக் குளிர் அதிகமாக இல்லை.

அவர் மெதுவாக எழுந்து தீவின் கரையோரமாகவே நடந்தார்.

கரைக்குச் சிறிது தூரத்தில் நீண்ட ராஜநாகங்கள் 'சரசர'வென்று செல்வதையும் அந்த நிலவொளியில் அவரால் காண முடிந்தது.

கடலில் இருந்து அடித்து வரப்பட்ட ஏராளமான பொருள்கள் கரையில் ஒதுங்கிக் கிடந்தன.

மணற்பரப்பில் பள்ளமான இடத்தில் முட்டையிடுவதற்காகக் கரையேறிய ஆமைகளையும் அவர் காண முடிந்தது.

கடலில் மீன் பிடிக்கும் பரதவர்கள் கூட, அந்தத் தீவில் ஒதுங்கியிருக்க மாட்டார்கள் போலத் தோன்றிற்று.

அவர் நடந்து சென்றபோது, சிறிது தூரத்தில் ஏதோ 'நீண்ட தோற்றத்தில் ஒதுங்கிக் கிடப்பது அவர் கண்ணுக்குத் தெரிந்தது.

வேகமாக ஓடினார்.

அது ஒரு செத்துப் போன கரு மீன்.

இன்னும் மேலே மேலே அவர் நடந்தார்.

ஓர் இடத்தில் உடைந்து போன கட்டுமரத்தின் நீண்ட மரங்கள் கூட்டமாகக் கிடந்தன.

சேரமான் அதைக் கடந்து செல்ல முயன்றபோது ஒரு பெண்ணின் முனகல் சத்தம் அவர் காதுகளுக்குக் கேட்டது.

திகைத்துப் போய் நின்றார்; திரும்பிப் பார்த்தார்.

மேலாடையை இழந்துவிட்ட நிலையில் ஒரு பெண், இடுப்புக்குக் கீழே தண்ணீரிலும் மேலே மணற் பரப்பிலுமாக, குப்புற விழுந்து கிடந்தாள்.

அடுத்த அலை வருவதற்குள், சேரமான் பரபரப்போடு அவளைத் தூக்கினார்; அப்படியே மணற் பரப்பில் கொண்டு போய் வைத்தார்.

குனிந்து முகத்தைப் பார்த்தார்.

சலீமா!

அவள் நிறைய கடல் தண்ணீரைக் குடித்திருப்பது தெரிந்தது.

அவளை அப்படியே தலைக்கு மேல் தூக்கி அவள் வயிற்றைத் தன் தலையில் வைத்து நாலைந்து முறை சுற்றினார்.

குடித்த தண்ணீர் அனைத்தும் வெளி வந்து விட்டது.

துடைப்பதற்கு ஒரு துணி கூட இல்லை; அவளது உள்ளங்காலை உரசித் தடவிச் சூடேற்றினார்.

உச்சந் தலையில் சூடேற்றினார்.

மெதுமெதுவாக அவள் கண் விழித்தாள்.

கண்ணதாசன்

அவர் முகத்தையே பார்த்தாள்.

மன்னரைப் பார்த்துத் திகைத்தாள்.

தனது அலங்கோல நிலை கண்டு, வெட்கி நாணமுற்று மார்பகத்தைக் கைகளால் மூடிக் கொண்டாள்.

சேரமான், நனைந்திருந்த தமது மேலங்கியைக் களைந்து அவளிடம் கொடுத்தார்.

அவள்'ஜெபுன்னிஸா' 'ஜெபுன்னிஸா' என்று சொல்லியழுதாள்.

'தான் வஞ்சி நகர்க் கரையிலேயே ஒதுங்கியிருப்பதாக' அவள் நினைத்தாள்.

''உன்னோடு கடலில் மூழ்கிய இன்னொரு பெண்தான் ஜெபுன்னிஸாவா? அவளை இன்னும் கண்டுபிடிக்கவில்லை'' என்றார் சேரமான்.

''இது என்ன இடம்?'' என்று கேட்டாள் சலீமா.

''இது ஒரு தீவு. அராபிக் கடலில் உள்ள பல தீவுகளில் ஒன்று; இதற்குப் பெயர் தெரியவில்லை'' என்றார் சேரமான்.

''நீங்கள் எப்படி வந்தீர்கள்?''என்று கேட்டாள் சலீமா.

சேரமான் நடந்தவற்றை விவரித்தார்.

அவருடைய மேலாடையைக் கொண்டு நன்றாக உடலை மூடிக்கொண்ட சலீமா, இந்த ஆபத்திலும் ஓரளவு மகிழ்ச்சியுற்றவள் போல் காணப்பட்டாள்.

ஆனால் ஜெபுன்னிஸாவின் பிரிவை மீண்டும் நினைத்து அழுதாள்.

''ஒருவேளை அவள் ஏதாவது ஒரு தீவில் ஒதுங்கியிருக்கக் கூடும்'' என்று சலீமாவுக்குஆறுதல் கூறினார் சேரமான்.

தனிமை நிறைந்த அந்த இடமும், அந்தப் பொழுதும், சேரமான் அருகில் இருப்பதும் அவளுக்கு ஒரு புதிய உற்சாகத்தைக் கொடுக்கத் தொடங்கின.

இனம் தெரியாத ஓர் உணர்ச்சியில் இதுவரை போராடிக் கொண்டிருந்த சலீமாவுக்கு அது, 'என்ன இனம்' என்பது இப்போது புரியத் தொடங்கிற்று.

கடற்காற்றில் அவர்களுடைய ஆடைகள் உலர்ந்தன.

''நீ களைத்துப் போயிருப்பாய், உறக்கம் கொள்; நான் விழித்துக் காவல் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார் சேரமான்.

''ஐயோ! எனக்காக உங்களுக்கு ஏன் தொல்லை?'' என்றாள் சலீமா.

''இதில் தொல்லை ஏதுமில்லை; இங்கு ராஜநாகங்கள் அதிகம்போல் தெரிகிறது. அதனால் பொழுது புலர்ந்த பின்தான் தீவின் உட்பக்கம் போக வேண்டும்; அது சரி உனக்குப் பசிக்கிறதா?'' என்று கேட்டார் சேரமான்.

''பசியே இல்லை'' என்றாள் சலீமா.

இடது கையைத் தலைக்கு வைத்து, வலது கையை மடித்து மார்புக்கும் வயிற்றுக்கும் இடையில் வைத்தவாறு அவள் சாய்ந்தாள்.

சேரமான் உட்கார்ந்தபடியே அவளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சலீமா அவரை ஒரு முறையும், ஆகாயத்தை ஒரு முறையுமாக மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இந்த நிலவொளியில் நீ அழகாக இருக்கிறாய்'' என்றார் சேரமான்.

சலீமாவின் மெய் சிலிர்த்தது.

''நான் உன் அழகை வர்ணிக்கக் கூடாது. என் இறைவன் ஏன் இப்படிச் சோதித்தான் என்று தெரியவில்லை. நாளை நாம் நகருக்குத் திரும்பிய பிறகு 'கடல் நம்மை அடித்துக் கொண்டு போய் விட்டது' என்று சொன்னால் நம்பக் கூடியவர்கள் குறைவாகவே இருப்பார்கள். 'ஓர் இளம் பெண்ணோடு தனியாக நான் வெளியில் தங்கி வந்தேன்' என்று பேசுகிறவர்கள் மேலும் சில கதைகளைக் கட்டி விடக் கூடும். அதனால் எனக்கு நேரப் போவது ஏதுமில்லை. 'உன் எதிர்காலம் என்னவாகுமோ' என்பதே என் கவலை'' என்றார் சேரமான்.

''இந்தக் கடலை எவன் படைத்தானோ அவனேதான் எதிர்காலத்தையும் நிச்சயிக்கிறான். இந்த ஆபத்தும் சந்திப்பும் நாம் எதிர்பார்த்தா நடந்தன? அது போலவே எதிர்காலமும், நாயகன் நினைக்கும்படியே நடைபெறட்டும்'' என்றாள் சலீமா.

கடலலையின் ஓசை மட்டுமே எழுந்து கொண்டிருந்தது அந்த நேரத்தில்.

'' எனக்கென்னவோ இங்கேயே இருந்து விட வேண்டும் போல்தோன்றுகிறது'' என்றாள் சலீமா.

சேரமான் பேசாமல் இருந்தார்.

''உங்களோடு பேசிக் கொண்டிருப்பதை விட, உலகில் சிறந்த நிகழ்ச்சி எதுவுமே இல்லை'' என்றாள் சலீமா.

அதற்கும் சேரமான் மௌனம் சாதித்தார்.

''பெண்மை மிகவும் பலவீனமான பிறப்பு, இல்லையா?'' என்று கேட்டாள் சலீமா.

''பலவீனம் எங்கே இருக்கிறதோ, பலமும் அங்கேதான் இருக்கிறது. மாபெரும் வீரனையும் பலவீனப்படுத்தக் கூடிய சக்தி, பெண்மைக்கு இருக்கிறது என்றால் — அது அவளுடைய பலம் தானே? எப்படியெப்படியோ வளைந்து, நெளிந்து வந்துள்ள என் வாழ்க்கைப் பாதையில் நான் மனதார விரும்பி அழுதது ஒரு முறைதான். அதுதான் யூஜி



''எக்ஸிபிஷனுக்குப் போகலாம் வாங்க!''

''அங்க என்ன இருக்கப் போறது? சைனா பஜார்லே இருக்கிற வளையல் கடையும், துணிக் கடையும்தான்!''

''அப்போ ! சைனா பஜாருக்காவது போகலாம் வாங்க!''

''அங்கே என்ன இருக்கப்போறது? எக்ஸிபிஷன்லே இருக்கிற துணிக் கடையும் வளையல் கடையும்தான்!''

---

யானாவின் பிரிவு'' — என்று ஒரு பெரு மூச்சு விட்டார் சேரமான்.

''பூஜியானாவை நீங்கள் அவ்வளவு விரும்பினீர்களா?'' என்று நாணத்தோடு கேட்டாள் சலீமா.

''விருப்பம் அவ்வளவு இல்லையென்றால் கண்ணீர் அவ்வளவு வந்திருக்காதே'' என்றார் சேரமான்.

சலீமா ஒரு பெருமூச்சு விட்டாள்.

''அழகு மட்டும் ஆராதிக்கப்படுவதில்லை. இதயமும் ஆராதிக்கப்படுகிறது. கறையோ, களங்கமோ இல்லாத ஓர் உள்ளம், நம்மிடத்தில் உயிரையே வைக்கும் போது, அதற்காக எதையும் செய்ய நம் உள்ளம் துணிந்து விடுகிறது. அதனால் என்னை ஏமாற்றியே பூஜியானாவை என்னிடமிருந்து பிரித்தார்கள்'' என்றார் சேரமான்.

''கடந்த மூன்றாண்டு காலமாக நான் உங்களைக் கவனித்து வந்திருக்கிறேன். 'பூஜியானா அதிர்ஷ்டக்காரி' என்று பல முறை எண்ணியிருக்கிறேன்'' என்று சொல்லி மற்றொரு பெருமூச்சு விட்டாள் சலீமா.

சேரமான் முழங்கையை மணலில் ஊன்றிச் சாய்ந்து படுத்தார்; மண்ணிலே கோலம் போட்டார்.

நல்ல ஜாதிப் பெண்களின் உடலில் இருந்து இயற்கையாக எழும் நறுமணம் சலீமாவின் உடலில் இருந்தும் எழுந்து, அவரைக் கிறங்க வைத்தது.

அவள் இலக்கியக் காதல் பற்றிப் பேசினாள்.

சேரமான் அதற்கு விரிவுரை நிகழ்த்தினார். அவர் இலக்கியத்துக்கு விளக்கம் கொடுக்கும் போதெல்லாம், தன்னையும் அதோடு இணைத்து இணைத்துப் பார்த்தாள் சலீமா.

'நீங்கினால் சுடுகிறது, நெருங்கினால் குளிர்கிறது', என்று அவர் விளக்கம் கொடுத்த போது, உண்மையில் அவள் உடம்பு கொதிக்கத் தொடங்கிற்று.

இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்தது பற்றி அவள் மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளத் தொடங்கினாள்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே பொழுது புலர்ந்தது.

அப்போதுதான் அவர்கள் இருவரும் அந்தத் தீவை நன்றாகப் பார்த்தார்கள்.

பயங்கரமான பாம்புப் புற்றுகள் அங்கே ஏராளமாக இருந்தன.

வகை வகையான பறவைகள் தன்னிச்சையாகப் பறந்து திரிந்து விளையாடின.

மனித ஜாதியைப் பார்த்து விட்ட மான்களும் முயல்களும் பயந்து அங்கு மிங்கும் ஓடின.

அவர்கள் தீவின் உட்புறமாக நடந்தார்கள்.

அங்கே ஏராளமான மாமரங்கள் தழைத்துக் கனிந்து கிடந்தன.

'நீண்ட காலத்துக்கு முன்பு யாரோ அவற்றைப் பயிரிட்டுப் பின்பு கைவிட்டிருக்க வேண்டும்' என்று சேரமான் நினைத்தார்.

சிறிது தூரத்தில் பாழடைந்த கோவில் ஒன்று அவர்களது கண்களுக்குப் பட்டது.

சுவர்களின் மீது மரம் முளைத்து விட்ட நிலையில், இடிபாடாகக் கிடந்த அந்தக் கோவிலைக் காண இருவரும் விரைந்தார்கள்.

கோவிலுக்குள்ளே ஒரு விக்கிரகம் இருந்தது.

ஏ ரா ள மா ன வௌவால்களும், நாகங்களும் விளையாடிக் கொண்டிருந்தன.

ஒரு பெரிய வௌவாலை விழுங்கி விட்டு, சாரைப் பாம்பு ஒன்று புரண்டு கொண்டிருந்தது.

உடைத்துப் போடப்பட்ட கற்களின் மீது, ஏறி நடந்த வாறு இருவரும் வந்து கொண்டிருந்தார்கள்.

இரண்டு கற்களுக்கிடையில் இருந்து சில உடும்புகள் வெளியே ஓடின.

பயந்து போன சலீமா, கதறியபடியே சேரமானின் மார்பிலே சாய்ந்தாள்.

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

பட்டுப் போன்ற பாப்பாவின் வளர்ச்சியிலே-
முதலிரண்டு ஆண்டுகள்...மொட்டு விரியும்
நேரம்—சிட்டுப்போல் பறக்க சிறகு
முளைக்கும் பருவம்—இந்த முக்கியமான
பருவத்திலே உங்கள் கண்மணிக்குக்
கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர்
பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப்
புசிப்பான்...உண்ணும் உணவெல்லாம்
ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம்
தரும் வைட்டமின்களோடு,
உங்கள் மகனின் வளர்ச்சிக்கு
மிக மிக அத்தியாவசியமான அமினோ
அமிலம், லைஸின் யாவும்
நிறைந்தது இன்க்ரிமின்.

அடடே!
என்ன வளர்ச்சி!
உண்டு வளர்வான்
கண்டு மகிழ்வீர்!



Incremin
drops LYSINE VITAMINS
TONIC APPETITE
STIMULANT

## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்—2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்— 14 வயது வரையில்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்—உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle சையனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சையனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

Sista's-INC-364C-R/76|Tam

அவளை அப்படியே மார்போடு சேர்த்துத் தூக்கிக் கொண்டு, அந்த இடத்தைக் கடந்தார் சேரமான்.

அந்தக் கதகதப்பான அணைப்பில் தன்னை மறந்திருந்தாள் சலீமா.

மணற்பரப்பில் அவளை இறக்கிவிட்ட சேரமான், 'ஏதோ உணர்ச்சி வசப் பட்டவர்' போலக் காணப்பட்டார்.'

பிறகு உள்ளத்தை ஒருமுகப் படுத்திக் கொண்டார்.

இன்னும் சிறிது தூரம் அவர்கள் நடந்தார்கள்.

ஓர் இடத்தில் சமாதி மேடு ஒன்று தெரிந்தது.

அதன் அருகிலே சென்று அவர்கள் கூர்ந்து கவனித்தார்கள்.

பதினைந்து கைப்பிடி உயரம் இருந்த அந்தச் 'சமாதியின் மீது, ஒரு பெரிய படுக்கைக் கால் சாத்தப்பட்டிருந்தது.

காற்று அடித்து அதன் மீது விழுந்து கிடந்த மணலைத் தட்டி விட்டார் சேரமான்.

அதில் ஏதோ சில எழுத்துக்கள் தெரிந்தன.

கையினால் தடவித் தடவிச் சேரமான் அதைப் படித்தார்.

''காதல் நிறைவேறாத பெருவழுதியும் எயினியும், வடக்கிருந்து உயர் நீத்த மேடு'' என்று அதில் எழுதியிருந்தது!

(தொடரும்)



# வாழ்வே மாயம்

மரணத்தில் தொடங்கும் படம் பின்னோக்கும் உத்தியைக் கையாண்டு மரணத்தில் முடியும் பொழுது இரட்டைச் சாவாகி இதயத்தை முறுக்கிப் பிழிந்து விடுகின்றது.

சரளாவை மணந்து சுதீந்திரன் நாயர் புத்தம் புதிய இல்லறம் தொடங்கும் பொழுது அழகான காதற் காவியம் உருவாகிறது. சிருங்கார உணர்ச்சிகளை அவர்கள் காட்டும் பொழுதோ 'இல்லறம் என்றால் இப்படி அல்லவோ அமைய வேண்டும்' என்று ரசிகர்களைப் பெருமூச்சு விட வைத்து விடுகிறது.

அதைத் தொடர்ந்து ஐயம் மாங்கனி வண்டெனப் புகுந்து துளைத்து விடுகிறது; தம்பதிகளைப் பிரித்தும் விடுகிறது. இதற்கு ஐயப்பாட்டைக் காட்டிலும் பெற்றோரும் உற்றோருமே உறுதுணையாக நின்றனர் என்பதைக் காணும்பொழுது ஆத்திரம் பற்றிக் கொண்டு வருகிறது!

மறுமணம் செய்து கொண்ட மனைவி, தங்களுக்குப் பிறந்த மகளின் திருமணத்துக்குத் தகப்பன் என்ற முறையில் வந்து வாழ்த்தி வெற்றிலைப் பாக்கு வாங்கிச் செல்ல அழைக்கும் பொழுது, உள்ளம் உருகி விடுகிறது. இறந்த கணவனை மனைவி காண வரும் கட்டமோ சோகத்தின் சிகரமாக உயருகிறது!

அருமையான சோக காவியத்தை நவரசங்களும் பரிமளிக்க இயக்கியிருப்பவர் சேது மாதவன். பார்ப்போரின் கற்பனைக்கும் வேலை கொடுத்திருப்பது அவர் ஆற்றலை உணர்த்துகிறது.

தோப்பில் பாஸியின் உயிர்ப்புமிகு வசனம், வயலார் ராம வர்மாவின் கருத்து மிகுந்த பாடல்கள், தேவ ராஜனின் இசை வளம் என்று ஒவ்வொன்றுமே படத்துக்கு மெருகூட்டுகின்றன.

வாழ்வை மாயமென்று உதறி சத்யன் மறைந்து விட்டாலும் சத்தியமாகத் தம் நடிப்பால் அமரத்துவம் பெற்று விட்டார். ஷீலா, உமர், அடூர் பாஸி ஆகியவர்களும் நடிப்பை யதார்த்த ரீதியில் பரிமளிக்கச் செய்திருக்கிறார்கள்.

நெஞ்சை விட்டு நீங்காத நல்லதொரு திரைக் காவியம் வாழ்வே மாயம்.

-ரா.வி.



## குட்மார்னிங் டாக்டர்!

# சிறு(நீர்)கோளாறு பெருந் தொல்லை!

வெடவெடவென்று நடுங்கியவாறு தள்ளாடி நடந்து வந்த அந்த நடுத்தர வயதுக்காரரைக் கைத்தாங்கலாக அணைத்துப் பிடித்து அழைத்து வந்தார் அவர் மனைவி! "நேற்று முதல் இவருக்குக் கடுமையான காய்ச்சல் அடிக்கிறது, டாக்டர்! விலாப்பக்கம் வலி அதிகமாக இருக்கிறது என்கிறார். இரண்டு நாட்களாகவே அடிக்கடி சிறுநீர் கழிக்க பாத்ரூமுக்குப் போகிறார்" என்றாள்.

"விலாப்பக்கம் மட்டுந்தான் வலி இருக்கிறதா? அல்லது வயிற்றுக்குக் கீழும் வலிக்கிறதா?" என்று நோயாளியைக் கேட்டேன்.

"விலாப் பகுதியில் வலி ஆரம்பித்து அடிவயிற்றுக்கும் கீழே — ஜனன உறுப்பிலும் பொறுக்க முடியாத அளவு வலிக்கிறது, டாக்டர்! சிறுநீர் கழித்து விட்டு வருவதற்குள் போதும் போதும் என்றாகி விடுகிறது. ஒரே எரிச்சல்...." என்று விளக்கினார் நோயாளி.

உடனடியாக அவரது சிறுநீரைச் சோதனை செய்து கொண்டு வரும்படி சோதனைச் சாலைக்குக் குறிப்பு எழுதிக் கொடுத்து அனுப்பினேன்.

"சிறுநீரைப் பரிசோதனை செய்ததன் முடிவு என்ன? அதிலிருந்து என்ன தெரிந்து கொள்ள இயலும்?"

"நோயாளியின் சிறுநீரில் 'பி. கோலை' (Bacterium Coli) என்ற கிருமிகள் இருப்பது தெரிய வந்தது. பொதுவாக, சிறுநீரை ஆய்வு செய்பவர் என்ன கிருமி உளது என்று தெரிவிப்பதுடன் என்ன மருந்து அந்தக் கிருமிகளை ஒழிக்க உதவும் (Antibiotic Sensitivity) என்பதையும் கண்டுபிடித்துச் சொல்லி விடுவார். இந் நோய் கண்ட சிலருக்குச் சிறுநீர் கழிக்கும்போது சிறுநீருடன் இரத்தமும் வெளிப்படுவதுண்டு. சிறுநீரில் சிவப்பு இரத்த அணுக்கள் (Red Blood Cells) மிகுதியாக இருப்பதும் உண்டு. கிருமிகளின் தன்மைக்கு ஏற்ப மருந்து கொடுக்க வேண்டும். அது உள்ளுக்குச் சாப்பிடும் காப்ஸ்யூல்களாகவும் இருக்கலாம். அவசியமிருந்தால் ஊசி மூலம் (Injection) உட்செலுத்தலாம்."

"இதற்குச் சிகிச்சை எவ்வளவு நாட்கள் வரை நீடிக்கும்?"

"பத்து அல்லது பதினைந்து நாட்கள் வரை சிகிச்சை நீடிக்கும். சிலருக்கு இரண்டு மூன்று நாட்களிலேயே வலி, எரிச்சல் மறைந்து விடலாம்; காய்ச்சல் குறைந்துவிடக் கூடும். அந்தக் காரணத்தினாலேயே சிகிச்சையை நிறுத்திவிடக் கூடாது. இரண்டு வார காலம் சிகிச்சை செய்து கொண்ட பிறகுதான் நோய் அறவே நீங்கும். சிகிச்சை நடக்கும்பொழுதே இந்நோய்க்கான அடிப்படைக் காரணத்தையும் மருத்துவர் கண்டறிவார்."

"எப்படிக் கண்டறிவது? அதற்கென வேறு பரிசோதனைகள் செய்ய வேண்டியிருக்குமா?"

"சிறுநீரகத்தைப் பரிசோதனை செய்ய வேண்டும். வயிற்றுப் பகுதியில் 'கல்' ஏதாவது உள்ளதா என்பதையும் சாதாரண எக்ஸ்-ரே (Plain X Ray) மூலம் கண்டறிய வேண்டும். Intravenous Pyclogram என்று ஒரு பரிசோதனையும் செய்ய வேண்டியிருக்கும். அறுபது வயதுக்கு மேற்பட்ட பெரியவர்களாயின் 'ப்ராஸ்டேட்' சுரப்பி (Prostate gland) பெரிதாகி உள்ளதா என்பதையும் கண்டறிய வேண்டும். இச்சுரப்பி பெரிதாக விரிவடைந்தால் அழுத்தம் ஏற்பட்டு அடிக்கடி சிறுநீர்



கழிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். சிறுவர்களுக்கும் சிறுநீர் தொடர்பான உபாதைகள் ஏற்பட வாய்ப்பு உண்டு. சிலருக்கு வலி, எரிச்சல் இல்லாமல் காய்ச்சல்-மட்டும் மிகுதியாக இருக்கலாம். காய்ச்சல்தானே என்று அலட்சியமாக இருந்து விடக்கூடாது."

"மகளிர்க்கும் இந்த உபாதை ஏற்படக் கூடுமா?"

"ஏற்படலாம். கருத்தரித்துள்ள நிலையிலும், பிரசவத்துக்குப் பின்னரும் சிறுநீர் சம்பந்தப்பட்ட நோய் (Urinary Infection) ஏற்படுவதுண்டு. இதற்கான அடிப்படைக் காரணத்தைக் கண்டுபிடித்து உரிய சிகிச்சை செய்ய வேண்டியது அவசியம். அடிக்கடி இந்த உபாதை ஏற்பட்டால் இரத்த சோகை (Anaemia) வந்து உடல் பலவீனமடையும். உரிய சிகிச்சை செய்யாமல் அலட்சியமாக இருந்து விட்டால் சிறுநீரகமே பாதிக்கப் படலாம். அந்த நிலையில் நோயாளியின் உயிருக்கே ஆபத்தாகி விடும். மேற்சொன்ன அறிகுறிகள் தெரிந்தவுடன் தாமதியாமல் மருத்துவரிடம் செல்ல வேண்டும்.

டாக்டர் வி. ஜயராமன் கூறக் கேட்டு

எழுதியவர்: ஆர். பி.



# புதிர்க் குழப்பம் போதாதென்று பக்கக் குழப்பம் வேறு?

வட்டமேஜை

☐ புதிருக்கு விடை காண முடியாத குழப்பம் போதாதென்று விடை எங்கே இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்கவும் குழம்ப வேண்டியதாகிவிட்டது. 60ம் பக்கம் போடவேண்டிய விடையை 50ம் பக்கம் போட்டிருக்கிறீர்களே! (9-1-77 இதழில்)

பாலக்காடு
7-1-77 வி. ரவி

☐ 'மதிப்பீடுகள்' மிகச் சிறந்த படைப்பு.

அறிஞர் வ. ரா. கூறுவார்: 'எழுத்தாளன் சீர்திருத்தவாதியில்லை. ஆனால் சீர்திருத்தக் கருத்துக்களை அவன்தான் விதைக்க முடியும்.'

இந்தச் சமுதாயத்தின் போலி மதிப்பீடுகளை இலக்கியம் மூலம் சாடிய இ. பா. அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

திருமல்கிரி
8-1-77 இ. சா. ராஜு

☐ மனித உணர்வுகளின் முரண்பாடுகளை இந்திரா பார்த்தசாரதி நிதர்சனமாக எடுத்துக் காட்டியிருக்கிறார். பச்சாதாபத்தின் நிழல்கூடப் படிந்திராத உள்ளங்களைப் பக்குவமாகப் படம் பிடித்துத் தந்திருக்கிறார். பண்பட்ட எழுத்து.

திருவாரூர்
8-1-77 தே. லட்சுமி நரசிம்மன்

☐ இதுபோன்ற மேட்ச்கள் நடத்தி வழங்கப்படும் வெள்ள நிவாரண நிதியின் மூலமாகவும் உணவுப் பொட்டலங்கள் இலவசமாக விநியோகிக்கப் படுகின்றன; மருந்துகள் கொடுக்கப் படுகின்றன. முப்பதாயிரம் பணக்காரர்களும் கொடுக்கும் வரிப் பணத்திலிருந்து நிறுவப்பட்ட இராணுவம், போலீஸ் படைகளும் மற்ற அதிகாரிகள் குழுவும், ஏழை மக்கள் துயர் துடைக்க ஓடோடிச் செயல் பட்டன. எனவே ரமா கோட்டூர்புரத்துக்குச் செல்வது எவ்வளவு நியாயமோ, அவ்வளவு நியாயம் கிரிக்கெட் மாட்ச் நடைபெறுவதும்.

திருவண்ணாமலை,
9-1-77 எஸ். ஆர். வீரராகவன்

☐ கவாஸ்கரைப் பற்றிய பிரசுரத்தில் இரு தவறுகள் காணப்படுகின்றன.

1971ல் அவர் வெஸ்ட் இண்டீஸுக்கு எதிராக முதல் டெஸ்டில் மட்டும்தான் விளையாட முடியவில்லை. இரு டெஸ்டுகளில் அல்ல.

ஒரே டெஸ்டில், 100ம், டபுள் செஞ்சுரியும் போட்டவர்கள் இருவர்தான் என்றுள்ளது தவறு. ஆஸ்திரேலியர்களான கிரெக் சாப்பல், டக் வால்டர்ஸ், வெஸ்ட் இண்டீஸ் லாரன்ஸ் ரோ, நம் கவாஸ்கர், ஆக நான்கு பேர் அந்தச் சாதனையைப் புரிந்துள்ளனர்.

சென்னை—28
8-1-77 வி. மகாலிங்கம்

☐ அன்பர் சர்வசித்தின் கேள்விக்குத் திரு ராஜேந்திரன், "மக்களைத் தட்டி எழுப்பத் தெரியாவிட்டால் போகிறது. உறங்கச் செய்கிற மாதிரி தாலாட்டுப் பாடும் எழுத்துக்களையாவது எழுதாமல் இருந்தால் சரி" என்று கூறியிருப்பதைப் படித்ததும், அண்மையில் பாண்டிச்சேரி கம்பன் கலையரங்கத்தில் நடந்த பாரதி விழாவுக்குத் தலைமை தாங்கிப் பேசிய திரு ம. பொ. சி. அவர்கள் கூறியது நினைவுக்கு வந்தது. அவர் சொன்னார்: "தாலாட்டுப் பாட்டு பாடாத கவிஞர் பாரதியார். சுதந்திர தாகத்தை உண்டாக்கும் பாடல்களையும், வீர உணர்ச்சியைத் தட்டி எழுப்பும் பாடல்களையும், தூங்குபவர்கள் எழ வேண்டும் என்பதற்காகப் பள்ளி எழுச்சிப் பாடல்களையும் பாடியவர் அவர். ஆனால் ஒரு தாலாட்டுப் பாடல்கூட பாரதியார் பாடவில்லை. நம் மக்கள் தூங்கிவிடக் கூடாது என்பதுதான் பாரதியின் எண்ணம்."

கடலூர்—2
7-1-77 தங்க குஞ்சிதபாதம்

☐ முற்றிலும் புதிய கோணத்தில் 'தாய்மை'யை நோக்கிய 'சிவசங்கரி'யும், 'பட்டுப் புடவை'யை வைத்து, 'ஒரு தலைமுறை உருவா'வதை மிகவும் சுவையான முறையில் எழுதியுள்ள 'கோமக'னும் பொங்கல் இதழுக்குச் சிறப்பூட்டியுள்ளனர்.

தலைஞாயிறு
14-1-77 எஸ். ராஜகணேஷ்

☐ சிவசங்கரி அவர்கள் எழுதியிருந்த "தாய்மை— ஒரு கோணம்" சிறப்புச் சிறுகதையைப் படித்தேன்.

நீண்டு வளையாத நெடுங்கோல் நீரினுள் வளைந்தாற்போல் தோன்றுவது 'இயற்கை. அதையே அதன் உருவாகக் கொள்வதா ?

திருச்சிராப்பள்ளி
17-1-77 ஏ. அசோக் ஸ்ரீனிவாசன்

☐ கோமகனின் 'ஒரு தலைமுறை உருவாகிறது' என்ற சிறுகதை படித்தேன். அவர் குறிப்பிடுகிற அல்லது எதிர்பார்க்கிற தலைமுறை உருவாகத் தாமதமானாலும் ஒரு நல்ல சிறுகதை இப்போதே உருவாகிவிட்டது ! வாழ்த்துக்கள்.

விருதுநகர்
17-1-77 செ. ஞானபாண்டியன்

# ஃபயர்ஸ்டோன் கார் டயர்களை உபயோகிப்பவர்கள் என்றும் பூப்பது-புன்முறுவல்







சில மாதங்களுக்கு முன்பு புதுக் கார் டயரை விற்பனைக்குக் கொண்டுவந்தோம். அதைப் பற்றி காரோட்டிகளுக்கு ஒன்றும் சொல்லவுமில்லை, அதிக விலையும் கேட்கவில்லை. வாங்கியவர்கள் தாமாக அறிந்தது-இந்த டயர் தரமாக நீடித்து உழைப்பதை !

கார் டயர் வியாபாரம் நெருக்கடி நிலையில் பாதிக்கப்பட்டபோது, நாங்கள் அஞ்சி ஓடவில்லை-விற்பனைச் சந்தையிலிருந்து. அதற்கு பதிலாக பாடுபட்டோம் மிகவும்...காரடயரை நன்ருக்க, அதிகப்படி டயர் உழைப்பை கூட்டிக் கொடுக்க! இதிலே வேற்றுமை காணவில்லை எனெனில், டிரட் டிசைன் ஒன்றே. ஆனால் ஷோல்டர்கள் மீதான அதிகப்படி ரப்பர் இதன் மைலோட்டத்தை அதிகரித்துள்ளது. சிக்கனம் வேண்டும்போது மிகச்சிக்கனமே!



**Firestone**



திறனுன சிறப்பு வருடத்துடனே. 76 ஆண்டுகளாக.

RADEUS/FS/CT.I

# மிளகு சிறுத்தாலும் காரம் போகுமா?

**கா**ப்பிக் கொட்டைக்கு ஏற்றுமதி வரி உயர்ந்திருக்கிறது — எவ்வளவு தெரியுமா? ரூ. 1,300லிருந்து ரூ. 13,000மாக! நம்புங்கள், உண்மைதான்! அரசு கவபமாக ஒரு சைபரைச் சேர்த்து விட்டது. தெரிந்து செய்தார்களா அல்லது ஒருவேளை அச்சுப் பிழையா என்று கூட சிந்திக்க வைக்கும் அளவுக்கு அபரிமிதமான வரி உயர்வு. விளைவு, அயல் நாடுகளில் இந்தியக் காப்பியை பகிஷ்கரிக்க வேண்டும் என்று பிரசாரம் ஆரம்பமாகியுள்ளது. நமது காப்பிக் கொட்டை வர்த்தகம் பாதிக்கப்பட்டுள்ளது. இதை எடுத்துக் காட்டி நிவாரணம் கோரியது எந்தக் கட்சி தெரியுமா? சுதந்திரக் கட்சிதான். மற்ற சில கட்சிகள் உட்பூசலிலும் உருப்படாத விவாதங்களிலும் நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கும்போது சுதந்திரக் கட்சி உபயோகமான கருத்துக்களை வெளியிட்டு அரசின் கவனத்தை ஈர்க்க முயலுகிறது.

சமீபத்தில் மதுரையில் சுதந்திரக் கட்சி மாவட்ட மகாநாடு நடந்தது. இந்த மகாநாட்டுக்கு திரு ஜி. கே. சுந்தரம் அவர்கள் வர இயலவில்லை. அவசரமாகத் தில்லி செல்ல வேண்டியிருந்ததால் திரு சா. கணேசன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மதுரை ஜில்லாவின் பல பகுதிகளிலிருந்தும் 200க்கு மேற்பட்ட உறுப்பினர்கள் வந்திருந்தார்கள். மாகாண கவுன்சில் உறுப்பினர்களில் அறுபத்தைந்து பேர் வந்திருந்தார்கள். இவர்களில் யாரும் பெரும் பணக்காரர்கள் அல்ல; தொழிலதிபர்கள் அல்ல; பெரும் மிராசுதார்கள் அல்ல. சிறு விவசாயிகள்; சிறு கடைகள் வைத்து வியாபாரம் செய்பவர்கள். இவர்களையெல்லாம் பார்த்தபோது சுதந்திரக் கட்சிக் கொள்கையினிடத்து எவ்வளவு ஈடுபாடு இருந்தால் இப்படிக் குழுமுவார்கள் என்று எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை.

திண்டுக்கல் முன்னாள் எம். பி. திரு அஜ்மல் கானும், மதுரை திரு ராமச்சந்திரனும் இம் மகாநாட்டுக்கு முக்கிய மூலபுருஷர்கள்.

சென்னையிலிருந்து திரு வி. ஆர். நரசிம்மனும் திரு வி. எஸ். ஸ்ரீகுமாரும் இன்னும் பல அன்பர்களும் வந்திருந்தார்கள்.

ஒசூர் முன்னாள் சுதந்திரக் கட்சி எம்.எல்.ஏ வெங்கடசாமி சுதந்திரக் கட்சிக் கொடி ஏற்றி அரிய சொற்பொழிவாற்றினார். பெட்டிக் கடைகள் மூடப்பட்டு விட்டதால் கிராம மக்கள் தங்கள் வீட்டில் எழவு விழுந்தால் கூட எடுக்கப் பணமில்லாமல் அல்லலுறும் பரிதாபக் காட்சியை வர்ணித்தார்.

திரு வி. ஆர். நரசிம்மன், ''பிரிட்டிஷ் ஆட்சியில் அமைதியும் ஓரளவு நல்லாட்சியும் நிலவியது. எனினும் அன்று தலைவர்கள் 'நல்லாட்சி தேவைதான், ஆனால் அதைவிட முக்கியம் சுயாட்சி' என்று சொன்னார்கள். 'மக்கள் உரிமைகள் மதிக்கப்பட வேண்டும்' என்றார்கள். 'மக்கள் சிலர் தவறு செய்



★ ராஜாஜியின் திருவுருவப் படத்தைத் திரு. வி. எஸ். ஸ்ரீகுமார் திறந்து வைத்தார்: திரு பி. ராமச்சந்திரன் மாலையிடுகிறார்.

★ மதுரை மாவட்ட சுதந்திரக் கட்சி மகாநாட்டு மேடையில் தலைவர்கள்.



ருர்கள் என்பதால் அனைவர் உரிமைகளையும் குறைத்து விடக் கூடாது' என்று வற்புறுத்தி வந்திருக்கிருர்கள். அதையேதான் இன்று சுதந்திரக் கட்சி கூறுகிறது'' என்ருர்.

மேலும் ''இன்றையச் சூழ்நிலையில் மக்கள் குறைகளை வெளியிட சட்ட சபைகள் இயங் காததால் ஒவ்வொரு சுதந்திரக் கட்சி உறுப் பினரும் தங்கள் சுற்று வட்டார மக்களின் பொதுக் குறைகளைக் கவர்னரிடம் தெரி விக்கும் பொறுப்பை ஏற்றுச் செயல்பட வேண்டும்'' என்ருர்.

ராஜாஜி கருத்துப்படி ஆட்சிக்கு வருவதை இரண்டாம் பட்சமாக்கி ஆரோக்கியமான கருத்துக்களை அரசுக்கு எடுத்துக் கூறுவதையே முதல் கடமையாகக் கொள்ளும் சுதந்திரக் கட்சி இன்று மீண்டும் துளிர் விடத் தொடங்கி யிருக்கிறது. தமிழ் நாட்டில் இன்று நிலவும் சூழ்நிலையில் சுதந்திரக் கட்சிக்கு நல்ல எதிர் காலம் இருக்கிறது. தமிழ் நாட்டில் நன்ருக வளர்வதாகத் தெரிந்தால், தேசம் முழுவ திலும் மீண்டும் துளிர் விட வாய்ப்புண்டு.

சில மாதங்களுக்கு முன் சீர்காழியில் சுதந் திரக் கட்சியினர் கூடினர். இப்போது மதுரை யில் மாவட்ட மகாநாடு நடைபெற்றது. அடுத்து திருச்சியிலும் திருநெல்வேலியிலும் கூட இருக்கிறது. நல்ல தேசியக் கட்சி, நல்ல கொள்கைகள் கொண்ட கட்சி, ராஜாஜி வளர்த்த கட்சி, மீண்டும் மக்களுக்குப் பணி செய்ய நாட்டுக்குப் பணி புரிய முன்வருகிறது. அதனை முழு மனத்துடன் வரவேற்போம்.

— எஸ். வி. எஸ்.

---



# அரக்கோணம் ராஜாஜி சிலை திறப்பு விழாவில்

## முதன் முதலாக...

இந்தியாவிலேயே முதன் முதலாக ராஜாஜி அவர் களின் முழு உருவச் சிலையை 6-1-77 அன்று அரக் கோணத்தில் த. நா. கா. க. தலைவர் கருப்பையா மூப்பனுர் தலைமையில் தமிழ்நாடு ஆளுனர் மோகன்லால் சுகாடியா திறந்து வைத்தார்.

அரக்கோணத்தில் ராஜாஜி சிலை வைக்கப்பட்டிருக் கும் தெருவின் பெயர் ராஜாஜி அவர்களின் அரசியல் எதிர்ப்பாளர் சத்தியமூர்த்தியின் பெயரைத் தாங்கிய சத்தியமூர்த்தி வீதி. ஆனுல் நகரின் அப்பகுதியின் பெயர் ராஜாஜி நகர் என்பதுதான்.

ராஜாஜியும் காமராஜும் அரசியலில் இரு வேறு துருவங்களாக இருந்தபோதிலும் எப்படி ஒற்றுமை யாக இருந்தார்களோ, அதேபோன்று அரக்கோணத் திலும் இருவரும் நெருங்கி நின்று கொண்டிருக் கிருர்கள். காமராஜ் சிலை இருக்கும் அந்தத் தெரு வில்தான் ராஜாஜி சிலையும் இருக்கிறது. இந்த இரண்டு சிலைகளுக்கும் இடையே உள்ள தூரம் நூறு அடிகூட இருக்காது.

## காங்கிரஸார் வைத்த ராஜாஜி சிலை

ராஜாஜி அவர்கள் காங்கிரஸ் கட்சியை எதிர்த்து வந்த போதிலும் அரக்கோணத்தில் அவர் சிலையை வைப்பதற்கான கமிட்டியில் இருந்தவர்கள் பெரும் பாலோர் (திரு வி. ராஜகோபாலன் ஏ.ஐ.சி.சி. உறுப்பினர் உட்பட) காங்கிரஸ்காரர்கள்தான். அதோடு இச் சிலைத் திறப்பு விழாவில் த. நா. கா. க. தலைவர் கருப்பையா மூப்பனுர், செயலாளர்கள் ப. நெடு மாறன், ஏ. கே. சண்முகசுந்தரம்; பொருளாளர் ராஜாராம் நாயுடு — ஆக த. நா. கா. கமிட்டியே கலந்து கொண்டு — ராஜாஜியின் தொண்டுகளைப் புகழ்ந்துரைத்தனர்.

## ஆளுனர் கூறிய சம்பவம்

''ராஜாஜி அவர்கள் சுதந்திராக் கட்சித் தலைவராகத் தமிழ்நாட்டில் வசித்து வந்தபோதிலும் சுதந்திராக் கட்சி வலிமையோடு இருந்து வந்த மாநிலம் எங்கள் மாநிலமான ராஜஸ்தான்தான். 1967-1971 ஆகிய பொதுத் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளனுக நான் தேர்தலில் போட்டி யிட்டபோது எனது தொகுதிக்கே வந்து ராஜாஜி என்னை எதிர்த்துப் பிரசாரம் செய்தார்.''

— ஆளுனர் திரு சுகாடியா

## ராஜாஜியின் எளிய வாழ்க்கை

''ராஜாஜி அவர்கள் மிகவும் எளிமையானவர் மட்டும் அல்ல; எளிய வாழ்க்கையும் நடத்தியவர். அவர் மந்திரி சபையில் நாங்கள் மந்திரிகளாக இருந்தபோது எங்களுக்கெல்லாம் பெரிய கார்களை வாங்கிக் கொடுத்த ராஜாஜி, தாம் மட்டும் ஒரு சிறிய காரிலேயே பயணம் செய்தார்.''

— த. நா. கா. க. பொருளாளர் ராஜாராம் நாயுடு.






தொகுப்பு: அரக்கோணம் சங்கர பாண்டியன்

# ஸ்ரீ வெங்கடேச பெருமாளின்

# ஆர்ஜித தெப்போத்ஸவம்

தற்போது வருடம் ஒரு முறை நடத்தப்படும் மூன்று நாள் தெப்போத்ஸவத்தைத் தவிர, யாத்ரீகர்கள் பெருமானைத் திருப்பள்ளி ஓடையில் சௌகரியமாகவும் அடிக்கடியும் தரிசித்து அருள்பெற பிரதி வாரமும் செவ்வாய்க் கிழமைகளில் ஒரு தெப்போத்ஸவம் இனி நடத்தப்பட இருக்கிறது. பக்தகோடிகள் ரூ. 1500 செலுத்தி இந்தத் தெப்போத்ஸவ விழாவில் கலந்து கொள்ளலாம்.

ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையன்றும் மற்ற ஆர்ஜித உத்ஸவங்கள் முடிந்த பிறகு, உற்சவ மூர்த்தி ஸ்ரீ மலையப்ப பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி சமேதராய் ஆபரணங்களுடன் நன்றாக அலங்காரம் செய்யப்பட்டு ரங்க மண்டபத்துக்குக் கொண்டுவரப்படும். இந்த தெப்போத்ஸவ விழாவில் பங்குகொள்ள விரும்பும் பக்த கோடிகளுக்கு இங்கு சங்கல்பம் செய்யப்படும். பிறகு மங்கள வாத்தியங்கள் முழங்க வேத பாராயணங்கள் ஒலிக்க கோவிலைச் சுற்றியுள்ள நான்கு தெருக்களிலும் உத்ஸவ மூர்த்திகள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படும். ஸ்வாமி புஷ்கரிணியின் கிழக்குக் கரைக்கு உத்ஸவ மூர்த்திகள் வந்து சேர்ந்தவுடன், நன்கு அழகாக அலங்காரம் செய்யப்பட்ட தெப்பத்தில் அவைகள் வைக்கப்படும். அர்ச்சகர்கள், பரிசாரகர்கள், வேத பாராயணம் செய்பவர்கள், மங்கள வாத்தியம் வாசிப்பவர்கள் தெப்பத்தில் உத்ஸவ மூர்த்திகளுடன் செல்வார்கள். இந்தத் தெப்போத்ஸவ விழாவில் பணம் செலுத்திப் பங்கு கொள்ளும் பக்தர்களுக்கு ஸ்வாமி புஷ்கரிணியில் ஒரு விசேஷ இடம் அளிக்கப்படும்.

மங்கள ஹாரத்தி ஆனதும் நாதஸ்வர இசை முழங்க, வேத பாராயணம் ஒலிக்க உத்ஸவ மூர்த்திகள் தெப்பத்தில் ஸ்வாமி புஷ்கரிணியை மும்முறை சுற்றி வரும்.

மூன்று முறை சுற்றி வந்த பிறகு பெருமாளுக்கு ஓர் இனிப்பு நைவேத்தியமாக அளிக்கப்படும். மங்கள ஹாரத்திக்குப் பிறகு இந்த தெப்போத்ஸவ விழாவில் பங்கு கொள்ளும் பக்தர்களுக்கு பெருமாளின் திருவுருவம் பதிக்கப்பட்ட ஐந்து கிராம் எடையுள்ள ஒரு தங்க டாலரும், வஸ்திர வெகுமானமும், நைவேத்திய பிரசாதமும் கொடுக்கப்படும். மறுபடியும் ஒரு மங்கள ஹாரத்தி எடுத்து, பெருமாளும் தேவிகளும் வாகன மண்டபத்துக்கு எடுத்துச் செல்லப்படுவார்கள்.

இந்தத் தெப்போத்ஸவ விழாவில் பங்குகொள்ளும் ஒவ்வொரு கிருஹஸ்தரும் அவரது குடும்பத்தாரும் (மொத்தம் பத்துப் பேர்கள்) ஸ்ரீ வாரி தரிசனத்துக்கு அனுமதிக்கப்படுவார்கள்.

திருப்பதி ஸ்ரீ வெங்கடாசலபதியின் இந்தப் புனிதமான விழாவில் பங்குகொள்ள விரும்பும் பக்தர்கள் திருமலை திருப்பதி தேவஸ்தான பேஷ்காருக்கு முன்னதாகத் தகவல் கொடுப்பதுடன், ''எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் திருமலை திருப்பதி தேவஸ்தானங்கள்'' என்ற பெயரில் ரூ. 1500க்கு பாங்கு டிராப்டு வாங்கி அனுப்பி வைக்கும்படியும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்
திருமலை திருப்பதி தேவஸ்தானங்கள்
திருப்பதி

# பஞ்சாமிர்தக் கிரிக்கெட்!

கோமதி ஸ்வாமிநாதன்

[எழுத்தாளர் பஞ்சாமிர்தம் வீடு. அவர் மகன் ராஜு வெளியிலிருந்து உள்ளே வருகிறான்.]

ராஜு: அப்பா! வாசலிலே யாரோ கூப்பிடும் சத்தம் கேட்கிறது.

பஞ்சாமிர்தம்: ஓஹோஹோ! பொங்கல் இனும் கேட்க வரும் கூட்டமாக இருக்கும். நான் உள்ளே போகிறேன்... இல்லேன்னு சொல்லிடு!

(பஞ்சாமிர்தத்தின் மனைவி பெரியநாயகி வருகிறாள்.)

பெரியநாயகி: நான் சொல்றேன் இல்லேன்னு.

பஞ்சா: வீராங்கனை வந்துட்டாடா! என்னத்தை இல்லேன்னு சொல்லப் போறே!

பெரிய: மத்தியானம் டிபன் இல்லேன்னு சொல்லப் போறேன். நான் எதிர் வீட்டுக்கு டெலிவிஷன் பார்க்கப் போறேன்!

பஞ்சா: இந்த நேரத்திலேயே சினிமாக் காண்பிக்க ஆரம்பிச்சுட்டாளா?

பெரிய: சினிமாவா? கிரிக்கெட் மாட்ச் பார்க்கப் போறேன்.

பஞ்சா: தெரியாமத்தான் கேட்கிறேன், உனக்குக் கிரிக்கெட்டைப் பத்தி என்ன தெரியும்?

பரிய: பார்த்துட்டு வந்து சொல்றேன்!

(பெரியநாயகி வாசலுக்குப் போகவும் வெளியிலிருந்தவர்கள் உள்ளே வருகிறார்கள்.)

வந்தவர்களில் ஒருவர்: ஐயா வணக்கமுங்க.

(மற்றொருவர் ஒரு மாலை போட வருகிறார்.)

பஞ்சா: வேண்டாம்!... மாலையெல்லாம் வேண்டாம்.... அப்புறம் கழட்டறபோது கழுத்துச் சுளுக்கிக்கும்! மாலை அவ்வளவு சின்னதாக இருக்கிறது!..

வந்தவர்: ஏதோ எங்களாலான மரியாதை!

பஞ்சா: அதெல்லாம் வேண்டாம். இதோ பாருங்க! நம்ம நாடு கபிட்சப் பாதையிலே போயிட்டு இருக்கு! விலைவாசியெல்லாம் இறங்கிக்கிட்டு வருது! இந்த நிலையிலே நீங்க பொங்கல் இனும் அது இதுன்னு...

வந்தவர்: ஐயா தப்பிதமாகப் புரிஞ்சுக்கிட்டீங்க! நாங்க பொங்கல் இனும் கேட்டு வரலீங்க....

பஞ்சா: உட்காருங்க!... உட்காருங்க! ... என்ன விஷயம்? ஏதாவது திறப்பு விழாவா?

வந்தவர்: திறப்பு விழா இல்லீங்க! ஆனா சிறப்பு விழான்னு சொல்லலாம்!

ராஜு: நீங்க யாருன்னு சொல்லவே யில்லையே!

வந்தவர்: பார்த்தீங்களா! ஐயாவைக் கண்டுக்கிட்ட சந்தோஷத்திலே மறந்துட்டோம்!.... நான் சிந்துமணிப்பேட்டை மாரிமுத்து!... அதோ அவரு காட்டேரி புரம் பிச்சையப்பன்!

பஞ்சா: எல்லாம் நமக்குப் பக்கத்துப் பேட்டைகள்தான். சொல்லுங்க!

மாரிமுத்து: இப்ப, இன்னிக்கு மத்தியானம் சிந்துமணிப்பேட்டைக்காரங்களும் காட்டேரிபுரத்துக்காரங்களும் கிரிக்கெட் மாட்ச் ஆடப் போறோம்! அதுக்கு ஒரு நல்ல மத்தியஸ்தராக....

பஞ்சா: அம்பயர்னு சொல்லுங்க...

பிச்சையப்பன்: பயர்ங்கற வார்த்தையைச் சொல்லாதீங்க. நாம விளையாடற இடத்துக்குப் பக்கத்திலே வைக்கோல் போர் நிறைய இருக்கு.



பஞ்சா: சரி! மத்தியஸ்தர்னே வைச்சுக்குங்க! என்னே எதுக்குப் பிடிக்கிறீங்க?... எனக்கு நிறைய வேலே இருக்கு.

மாரி: ஐயா அப்படிச் சொல்லக் கூடாது! ஐயா நியாயமாக முடிவு சொல்லுவீங்கங் கற நம்பிக்கை! இது எங்களுக்குள்ளே முதல் பந்தயம்!

பஞ்சா: நான் கால் கடுக்க நிற்பேன்! நீங்க நல்லா ஆடணுமே?

பிச்சை: எங்க ஆட்கள் பிச்சு வாங்கிடுவாங்க!

மாரி: எங்க ஆளுங்க ஒண்ணும் சோடை யில்லேங்கறேன்! கொளுத்திப்பிடுவாங்க!

பஞ்சா: சும்மா இருங்க! அவர் 'பயர்'ன்னு பயப்படுறார். நீங்க கொளுத்திப்பிடுவேன் கறீங்களே!....ஏண்டா ராஜு!...என்னடா சொல்றே!

ராஜு: சான்ஸை விடாதீங்கோ! நானேயே டெஸ்ட் மாட்சுக்கு பம்பாய், கல்கத் தான்னு உங்களைக் கூப்பிட இது ஒரு அஸ்திவாரம்! ஆனல் ஒரு விஷயம்!

பஞ்சா: என்னடா?... சந்தேகப்படறே!

ராஜு: இப்போ உங்களுக்கு வெள்ளைக் கோட்டும், கறுப்புப் பாண்டும் தேவை !

பஞ்சா: ஆமாங்க! அது ஒரு சிக்கல்!...

பிச்சை: பரவாயில்லேங்க!... நீங்க ஒரு கறுப்புத் துண்டைத் தலேயிலே முண்டாசு கட்டிக்கிடுங்க! எங்கிட்டே புதுத் துண்டு இருக்கு! அடையாளம் தெரியும்!

ராஜு: சரி!... 'நீங்க போயி ஒரு ரிக்ஷா கூட்டிக்கிட்டு வாங்க!

மாரி: ரொம்ப நன்றீங்க!...இதோ வரோம்.
(போகிறார்கள்)

பஞ்சா: இது என்னடா வம்பு? டேய் ராஜு அவுட்னு காண்பிக்க எப்படிடா கையைத் தூக்கணும்?

ராஜு: அந்த ஏரியாவிலே காக்கை ரொம்ப பறக்கும். அதை விரட்டக் கையைத் தூக் கிடாதீங்க! நான் அவுட்டில்லேன்னு சண் டைக்கு வந்துடுவாங்க!

பஞ்சா: நான் வாயாலேயே கத்திட்டுப் போறேன்!.... (உள்ளே போகிறார்.)

(2)

(மாரிமுத்து கோஷ்டியைச் சேர்ந்த வீரப்பனும் ராஜா பாதரும் மட்டை பிடித்திருக் கிறார்கள். காட்டேரிபுரம் பிச்சையப்பன் கோஷ்டியைச் சேர்ந்த சங்கரலிங்கம் பந்து வீசத் தயாராகிறன்.)



பஞ்சா: இந்தாப்பா சங்கரலிங்கம்! நீ என்ன தொழில் பண்ணறே?

சங்கரலிங்கம்: பிள்ளையார் கோவிலிலே சூறைத் தேங்காய் உடைக்கிற பூசாரிங்க!

பஞ்சா: அதுதான் பந்தை அப்படிக் குத்தி உடைக்கிறே! அது தப்பு. மட்டை பிடிக் கிற ஆள் மண்டையை உடைச்சுடுவே போலிருக்கே!

சங்கர: ஐந்நூறு பேர் கூடி நின்றாலும் ஒரு ஆள் மேலே படாம அலாக்கா சூறை போடுவேன். (பந்தை வீசுகிறன்)

வீரப்பன் (தள்ளி ஓடி): நான் அடிக்கமாட் டேன்! அடிக்க மாட்டேன்!

(பஞ்சாமிர்தம் அவனைச் சமாதானம் செய்யும் நினைப்பில் கையை உயர்த்து கிறார்.)

மாரி (ஓடிவந்து): இந்தாய்யா மத்தியஸ்தா! ஏது எங்க ஆளே அவுட் கொடுக்கறே... பந்து பக்கத்திலேயே அவன் இல்லே!

பஞ்சா: வீரப்பன் அவுட் இல்லே!... சங்கர லிங்கம் அவுட்!

பிச்சை: என்னையா? என் ஆளு எப்படி அவுட் ஆவான்? ரூல் புதுசா இருக்கே?

பஞ்சா: உங்க ஆள் சங்கரலிங்கம் தேங் காய்க் குடுமியைப் பிய்க்கிற மாதிரி பந்தை உரிக்கப் பார்க்கிறன்! அது ரூலுக்கு விரோதம்.

சங்கர: நான் பத்து வருஷமா சூறைத் தேங்காய் உடைக்கிறேன்!...

பஞ்சா: உன் ஓவர் முடிஞ்சு போச்சு !... அடுத்த பௌலர்!

(கன்னியப்பன் பந்தை வாங்கிக் கொள்ள ராஜாபாதர் பஞ்சாமிர் தத்திடம் ஓடி வருகிறன்.)

ராஜாபாதர்: அந்த ஆள் பந்து போடப் படாதுங்க!

பஞ்சா: ஏன்? அவரும் ஆட்டக்காரர்தானே!

ராஜா: அவன் காளியம்மன் கோவில்லே குறி சொல்றவனுங்க.

பஞ்சா: அதுனலே என்ன? அவரு பந்து வீசக் கூடாதுன்னு சட்டம் இல்லேயே!

ராஜா: இல்லீங்க!....அவன் மந்திர மையைப் பந்தில் தடவி வீசுவான். பந்து வறது என் கண்ணுக்குத் தெரியாது. ஆனல் விக்கெட் போயிடும்.

பஞ்சா: இதென்னய்யா பைத்தியக்காரத் தனம்? இந்த மாதிரி மையை எங்கே வைச்சிருக்காரு?

ராஜா: அவன் நெத்தியைப் பாருங்களேன்! ஒரு ரூபா அகலத்துக்குச் சாந்துப்பொட்டு வைச்சிருக்கானே! அது சாதா சாந்து இல்லே! மந்திர மை! அதைத் தொட்டுத் தேச்சுத் தேச்சுப் பந்தை வீசுவானுங்க.

கன்னி: அட காளியாத்தா! இது அவ்வாது சாமி! இந்தாய்யா, அம்பாயிரு...நீ கொஞ் சம் இட்டுக்க! வாசனையா யிருக்கும்.

(தன் நெற்றியிலிருந்து கொஞ்சம் சாந்தை எடுத்துப் பஞ்சாமிர்தத்தை நெருங்குகிறன்.)

பஞ்சா: நோ! நோ! உன் தலையை உடனே காளியம்மன் கோவிலுக்கு... நோ நோ!...

# ஓடும் ரயிலில் ஒரு கொலை



'அகதா கிறிஸ்டி' - என்றதுமே அற்புதமான துப்பறியும் கதைகளின் நினைவு வரும். அவர் எழுதிய 'மர்டர் ஆன் தி ஓரியண்ட் எக்ஸ்பிரஸ்' என்ற மர்மக் கதையைப் படமாக்கி யிருக்கிறார்கள். ஆவலைத் தூண்டும் வகையில் எழுதப்பட்ட நாவல் பல - படமாக்கப்படும்போது பல கொட்டாவிகளை உதிர்க்க வைக்கும். அகதா கிறிஸ்டியின் இந்த நாவலும் அந்த வகையில்தான் படமாக்கப்பட்டிருக்கிறது. இத்தனைக்கும் ஒரே நட்சத்திர மயம் இந்தப் படத்தில் - லாரன் பகால், இன்கிரிட் பெர்க்மான், ஷீன் கானரி, ஜான் கில்கட், ஆல்பர்ட் ஃபின்னே - போதுமா?

ஐரோப்பாவின் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்குச் செல்லும் சொகுசு ரயில் ஒன்று. கதை நடக்கும் காலம் 1930ம் ஆண்டுவாக்கில். அந்தக் காலத்திலேயே அந்த ஓரியண்ட் எக்ஸ்பிரஸ்ஸில் எத்தனை வசதிகள்! ஒரு நள்ளிரவில் பனிப்பாறை ரயில் பாதையில் விழுந்து மூடிக்கொள்ள மேலே வண்டி போக முடியாது என்ற நிலையில் வண்டிக்குள் ஒரு கொலை நடந்து விடுகிறது. இதுவரை விறுவிறுப்புடனும், புதுமையாகவும் செல்கிறது படம்.

தற்செயலாக அந்த ரயிலில் பிரயாணம் செய்ய நேர்ந்த பிரபல துப்பறியும் நிபுணர் ஒருவர் துப்புத் துலக்க ஆரம்பிக்கிறார். அவ்வளவுதான், ரயில் வண்டி விசாரணைக் கூடமாகிறது. ஒரே பேச்சு.... பேச்சு... நம் பொறுமை போச்சு... போச்சு!

துப்பறிபவராக நடிப்பவர் ஆல்பர்ட் ஃபின்னே. சும்மா சொல்லக்கூடாது. மனுஷன் கரடியாகக் கத்திக் கத்தி ஒருவிதமாகக் கொலை எப்படி, யார், ஏன் செய்தார்கள் என்பதைப் பிட்டுப் பிட்டு வைக்கிறார். அதுவரை வண்டி நகரவில்லை. ஓரியண்ட் எக்ஸ்பிரஸ் ஒரு வழியாகக் 'கூ' என்ற சத்தத்துடன் கிளம்பும்போது நாமும் 'அப்பாடா!' என்று இடுப்பைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்கிறோம். திரைப்படக் கலை நுணுக்கங்களைப் பற்றிக் கவலைப் படாமல் கதை வளர்ந்து முடிவதை மட்டும் ரசிப்பவர்கள் இப் படத்தை விரும்புவார்கள். - கௌசிகன்

---

அந்தக் கறுப்பு மையைச் சோதனைக்கு அனுப்பணும். நீ இப்போ பந்து வீசாதே! அடுத்த ஆள்!

*(மொட்டையாண்டி பந்தை வாங்கிக் கொள்கிறான்.)*

ராஜா: அது ரைட்டுங்க.

*(மொட்டையாண்டி பந்தை 'அண்டர் ஆர்ம்' வீச ராஜாபாதர் இழுத்து அடிக்கிறான்.)*

பஞ்சா: (பவுண்டரிக்கு அடையாளமாகக் கையைக் காட்டிவிட்டு) ...இந்தாப்பா! பந்தைத் தலைக்கு மேலே தூக்கிப் போடணும். இப்படி உருட்டப்படாது.

மொட்டையாண்டி: நமக்கு ஒரு வாரமா தோள்லே சுளுக்குங்க!... இப்படித்தான் போட முடியுமுங்க!

பஞ்சா: நாசமாப் போச்சு! இது கிரிக்கெட்டா? கல்யாண வீட்டு நலங்கா?.. சீக்கிரம் நடத்தி முடியுங்க!

*(மொட்டையாண்டி உருட்டிய பந்தை ராஜாபாதர் படுவேகமாக அடிக்க அந்தப் பந்து நேராக வந்து பஞ்சாமிர்தத்தின் முழங்காலைத் தாக்குகிறது. பஞ்சாமிர்தம் அலறிக் கொண்டே கீழே உட்காருகிறார்.)*

ராஜா (ஓடி வந்து): நான் அப்பவே சொன்னேனே! இது காளி கோவில் மை!... அப்பவே கன்னியப்பன் தடவி யிருக்கான். அதுதான் அம்பயர் கண்ணுக்குத் தெரியலே! அடி வாங்கிட்டாரு.... இது மை வேலே!

பஞ்சா (முழங்காலைத் தடவியபடி): மண்ணாங்கட்டி வேலே! மொட்டையாண்டி இப்படிப் பந்தை உருட்டினா நீங்க ஆளுக்கு மூவாயிரம் ரன் எடுப்பீங்க இல்லையா!... இப்போ நான் ஒரு முக்கிய அறிவிப்பு செய்யப் போறேன்!

ராஜா: கன்னியப்பன் மேலே புகாரா! ஜவ்வாதுப் பொட்டை வழிச்சு எடுத்து ரசாயனப் பரிசோதனைக்கு அனுப்பலாமா?

பஞ்சா: அறிவிப்பு அது இல்லே...இதுதான்: சித்துமணிப்பேட்டை, காட்டேரிபுரம் இரண்டு கோஷ்டிகளுமே இன்னும் ஐந்து வருஷங்களுக்குக் கிரிக்கெட் ஆட்டத்தைப் பற்றி நினைக்கக் கூடாது! அப்படியே ஆடினாலும் மத்தியஸ்தரா என்னைக் கூப்பிடக் கூடாது!

*(நொண்டிக் கொண்டே வேகமாக ஓடுகிறார்.)*

தமிழ்ப் படங்களுக்கு இப்பொழுது ஒரு சோதனைக்காலம். எந்தப் படமும் ஒருசில வாரங்கள் கூட ஓடுவதில்லை. இந்த நிலையில் ஓர் அதிசயம் என்னவென்றால், நம் தமிழ்ப் படாதிபதிகள் இன்னும் கொஞ்சம்கூட முன் யோசனை இல்லாமல் படங்கள் தயாரித்து வெளியிட்டுக் கொண்டிருப்பதுதான்.

சிதா சித்ராவின் "அன்று சிந்திய ரத்தம்" பெயர்தான் அமர்க்களமாயிருக்கிறது. தயாரிப்பாளர்கள் இந்தப் படத்துக்காக ஒரு சொட்டு வியர்வை கூடச் சிந்தியிருப்பார்களென்று தோன்றவில்லை. இந்த வண்ணப் படத்துக்காக ஏராளமாகப் பணம் செலவழித்திருக்கிறார்கள். ஆனால் துளிக்கூட சிந்தனை சக்தியைச் செலவழித்ததாகத் தெரியவில்லை.

எத்தனையோ படங்களில், எத்தனையோ காலத்துக்கு முன் வந்துவிட்ட பல 'ஸ்டண்ட்' காட்சிகள் இப்படத்தில் வருகின்றன. ஏதோ ஒரு கிராமத்தில், ஏதோ ஒரு கோவிலில் தங்கப் புதையல் இருந்ததாம். அதைக் களவாட ஒரு கொடியவன் - பெயர் உடையப்பன் — பெரும் கூட்டத்துடன் முயற்சி செய்கிறானும். அவன் ஒரு மலைக் குகையில் நவீன விஞ்ஞான சாதனங்கள் கொண்ட ஒரு மர்ம மாளிகையில் வசிக்கிறானும். ஒரு வீரன் ஆனால் அநாதை. அந்தக் கொடியவனுக்கு எதிராகச் செயல்படுகிறானும். அவன் தனியாகச் செயல்பட்டால் என்ன சுவாரஸ்யம் இருக்கும்? ஒரு பருவப் பெண் — 'ஸ்டண்ட்' வேலைகள் தெரிந்தவள் — அவனுக்கு உதவியாக இருக்கிறாளாம். படத்தில் ஒரு பெண் இருந்தால் போதாதே! அதற்காக இன்னொரு பெண் — அவள் வில்லனுக்கு உதவியாக இருக்கும் 'ஸ்டண்ட்' ராணி! கடைசியில் வில்லன் பிடிபடுகிறான். எல்லாம் முடிந்த பிறகு வழக்கம்போல் கடைசிக் காட்சியில் போலீஸ் படை வருகிறது. (போலீஸ் இலாகாவை வெறும் சோம்பேறிக் கூட்டமாகக் காட்டும் பழக்கம் நம் திரைப் படங்களில் என்றுதான் ஒழியுமோ?)

ஜெய்சங்கர் கதாநாயகன். சண்டைக் காட்சிகளில் தமக்கே உரிய திறமையைக் காட்டியிருக்கிறார். அநாதைக் கதாநாயகன் காதலில் அநாதையில்லை; இரு பெண்கள் கிடைக்கிறார்கள்.

பத்மப்ரியா குளிர் காயப் போக, அப்பொழுது காதலனுடன் பழக்கம் ஏற்படுகிறது. பத்மப்ரியாவும் ஜெய்சங்கரும் அவசியம் இல்லாத அளவு நெருங்கி நடித்திருக்கின்றனர். பத்மப்ரியாவுக்கு மிகவும் சுலபமான பாத்திரம் — புடவை கட்டிக் கொள்ளும் சிரமம்கூட இல்லை.

வில்லனின் கையாள் சுநந்தினி பத்மப்ரியாவோடு போட்டி போட்டுக் கொண்டு ஆடைக் குறைப்புச் செய்திருக்கிறார்! ஜெய்சங்கருக்கு விறுவிறுப்பான சண்டைக் காட்சிகளிலும் மோட்டார் சைக்கிள் மோதல் காட்சிகளிலும் சக்கைப் போடு போட வாய்ப்புக் கிட்டியிருக்கிறது.

மனோரமா, தேங்காய் சீனிவாசன் நடத்தும் காமெடிக் காட்சிகளில், காதல் பேச்சுக்கள் கைகலப்புகள் எல்லாம் விரசம் தட்டுகின்றன.

அசோகன் வில்லன் என்பதற்காக அந்தக் காட்டுக் கத்தல் கத்த வேண்டுமா? மர்ம மாளிகையின் மர்மக் காட்சிகள் கொஞ்சம் கூட நம்பும்படியாயில்லை!

திரைக் கதையின் அசட்டுத்தனங்கள் போதாக்குறைக்குப் பாடல்கள் வேறு வேதனைப்படுத்துகின்றன. கதை, வசனம்: பானு. டைரக்‌ஷன்: டி. ஆர். சுந்தரம்.

"அன்று சிந்திய ரத்தம்" — என்றோ ஒழித்துக் கட்டியிருக்க வேண்டிய வேதனை!

—காந்தன்





# சிலம்புச் செல்வம் (ம.பொ.சி)



நால் வருணங்களிலே அரச வருணத்தை அடுத்தது வணிக வருணம். அதனால், மறைகளிலே சொல்லப்பட்ட முறையில் நிவேதனம் செய்த பின் உணவு கொள்ளத் தொடங்கினான் கோவலன். கண்ணகி தன் கணவனுக்கு உணவு படைப்பதையும், அதனைக் கோவலன் உண்டு மகிழ்வதையும் கண்டு மாதரியானவள் மனம் பூரித்தாள்.

"தென் மதுரையின் ஆயர்பாடியான நமது குடியிருப்பிலே வந்து, அமுதுண்ணும் இக் கோவலன், முன்னாளில் வட மதுரை ஆயர்பாடியிலே யசோதை பெற்றெடுத்த காயாம்பூ மேனியனை கண்ணனைப் போல் காட்சி யளிக்கின்றான். பல வண்ணங்களாலான வளையல்களை அணிந்த கண்ணகியோ, பண்டு நம் குலத்தில் தோன்றிக் கண்ணனுடைய துயர் தீர்த்த நப்பின்னை போன்றிருக்கிறாள். இவள் நம் குலவிளக்கு" என்று கூறி ஐயையும் அவளுடைய அன்னையான மாதரியும் விம்மிதம் எய்தினர். "இவர்கள் காட்சி நமக்குக் கண்கொள்ளாக் காட்சி" என்றும் கூறி மகிழ்ந்தனர்.

"ஆயர் பாடியின்
அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர்
வண்ணன் கொல்லோ,
நல்லமுது உண்ணும்
நம்பி! சங்குப்
பல்வளைத் தோளியும்
பண்டு நம் குலத்துத்
தொழுனை யாற்றினுள்
தூமணி வண்ணனை
விழுமம் தீர்த்த
விளக்குக்கொல்!' என;
ஐயையும் தவ்வையும்
விம்மிதம் எய்திக்
'கண்கொளா நமக்கு,
இவர் காட்சி, சங்கு' என—

முன்பு கோவலனை இருட்டிய பின் உணவு கொள்ளாத விரதமுடைய சமணனாகக் கூறிய மாதரி, இங்கு வைணவர் தெய்வமான அசோதை பெற்றெடுத்த கண்ணனாகக் காண்கின்றாள். இதற்கு அவள் வைணவ சமயத்தினள் என்பதும் காரணமாகலாம்.

புகார் நகர மாதர்கள் "கண்டேத்தும் செவ்வேள்" என, சைவத் தெய்வமாக வருணித்ததையும் கேட்டோம். இதனால், நாம் கோவலனுடைய சமயம் இதுவெனத் தெளிவதற்கில்லை.

கண்ணகி அளித்த உணவை உண்டு முடித்த பின், தனியே ஒரு புறத்தில் சென்று அமர்ந்து, அங்கு கண்ணகியை அழைத்தான் கோவலன். அழைத்தவன், அவளைத் தன் அன்புக் கரங்களால் தழுவி, அருகில் அமர்த்திக்கொண்டான். முன்னரே அவள் தந்த வெற்றிலையையும் பாக்கையும் மென்று சுவை பார்த்த வாயால், அந்தக் கற்புத் தெய்வத்தின் அருங்குணங்களைப் புகழலானான். அவள் அடைந்த வழிநடைத் துன்பத்தை நினைந்து, "கல்லதர் அத்தம் கடக்க யாவதும், வல்லுநகொல்லோ மடந்தை மெல்லடி" என்று இரங்கிக் கூறினான். அதுகாறும் தன் மனத்தை வருத்திய ஒன்றையும் அவளிடம் கூறினான். முதுமைப் பருவத்தில் உள்ள பெற்றோரைத் தனியே தவிக்க விட்டு, அவர்களிடம் சொல்லிக்கொள்ளாமலே வந்த தன் தவற்றைச் சொல்லி வருந்தினான். "எம்முதுகுரவர் என்னுற்றனர் கொல்?" என்றான்.

"இத்தீங்கு நேர்ந்தது மாயத்தாலோ? எனது வல்வினையாலோ?" என்று சொல்லி அங்கலாய்த்தான். ஆழ்ந்து சிந்தித்துப் பாராமல் இவ்வளவு தவறுகளைச் செய்துவிட்டதற்காகத் தன்னையே நொந்து கொண்டான்.

கோவலனுக்கு மாதவியோடு கூடி வாழ்ந்த காலம் நினைவுக்கு வருகிறது. அந்த நினைப்பு அவனுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. "என்னைப் பார்த்துப் பிறர் சிரிக்கவும், சிறுமை பேசவும் காரணமானேன். வணிக வருணத்துக்குரிய ஒழுக்கங்களிலே ஒன்றைக்கூடக் கடைப்பிடிக்காமல் அவையனைத்தையும் துறந்தேன். அறிவுடையோர் கூறிய பொருளுடைய சொற்களை நஞ்செனக் கருதி ஒதுக்கினேன்" என்றெல்லாம் கூறிக் கூறி நெஞ்சம் குமுறினான்.

"இனி திரும்பவும் ஒழுக்க வாழ்வினை யான் பெறுவதும் உண்டோ? ஐயோ! பெற்றோர் இட்ட கட்டளைகளில் ஒன்றைக்கூட நிறைவேற்றாமல் அவற்றிலிருந்து வழுவினேனே! சிறிய பருவத்தினளாயினும் அறிவில் முதிர்ந்தவளான உனக்கும் என்னால் சிறுமை நேரும்படி நடந்துகொண்டேனே!" என்றான்.

"பொருள் தேடச் செல்லுங்கால், மனைவியை உடன் அழைத்துச் செல்வது வணிகருடைய மரபுக்கு மாறானது என்பதனை அறிந்திருந்தும், 'மதுரை மூதூர் செல்வோம்; ஏடமர் கோதாய் எழுக!' என்று கூறி நமது பெரிய நகரினின்றும் இந்த நகருக்கு உன்னை அழைத்து வந்தேனே. நீயேனும், 'இது நம் மரபுக்கு மாறானது' என்று கூறி, புகாரிலேயே நின்றிருக்கக் கூடாதா?" — என்று பலவாறாகக் கூறித் தன் கடந்த கால செயல்களுக்காக வருந்தினான். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

கணுக்காலில் சுளுக்கா?



# ஆற்றுவது அயொடெக்ஸ்

## தேய்த்து ஆற்றும் நிவாரணம்.

வலி தணிக்கும் களிம்புகள் பல இருக்கலாம்; ஆனால் வலி தணித்து அதே சமயம் ஆற்றிவிடுவது அயொடெக்ஸ். ஆற்றக் காரணம் அதில் உள்ள அயொடின்.

தசை வலிக்கும் சரி, மூட்டு நோவுக்கும் சரி,-- ஆற்றும் களிம்பு ஒன்றுதான் : அயொடெக்ஸ்.




**போடுவீர் அயொடெக்ஸ், புறப்படுவீர் ஓடியாட.**

லிண்டாஸ். IODEX-3-140 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியா காசு